4 பக்கங்கள் 25 காசுகள்

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

பதிவு எண் எம்: 8798

கதிர் 13 மதுரை 2—12—75 செவ்வாய் மலர் 253

## சுதந்திர பாரதமாதாவின் அடிமை குழந்தைகள்

(சுமார் 58 கோடிமக்களைக்கொண்ட இந்தியாவில்) உழைக்கும் குழந்தைகள் ஒருகோடியே 20 லட்சம் பேர். இவர்களில் 90 சதவீதம் பேர் கிராமப்புறங்களில் உள்ளனர். மீதியுள்ள 10 சதவீத உழைக்கும் குழந்தைகள் நகர்ப்புறத்தில் உள்ளனர்.

இவ்விபரம்' பொது ஒத்துழைப்பு, குழந்தை வளர்ச்சிக்கான தேசிய அமைப்பால் ஏற்பாடு செய்யப்பட்ட கருத்தரங்கு ஒன்றில் தெரிவிக்கப்பட்டது.

## மக்களின் பணத்தில் மிதக்கும் அதிகார வர்க்கம்

புதுடெல்லி, நவ. 27—

20 லட்சம் தொழிலாளர்களைக் கொண்ட இந்திய ரயில்வேயில் 8ஆயிரம் உயர்தர அதிகாரிகளுக்காக மட்டும் ரயில்களில் வசதிமிக்க ஆயிரம் ட்ரக்குகள் ஒதுக்கப்பட்டுள்ளன இவர்களின் வசதிக்காக ஓராண்டிற்கு ரயில்வே செலவழிப்பது ஒரு கோடி ரூபாய். அதிகாரிகளுக்கு இவ்வசதிகள் அவசியமென ரயில்வே கருதுகின்றதாம்.

மற்றும் அரசாங்க விருந்தினர்கள், பெரிய மனிதர்கள், கவர்னர்கள் உயர்ராணுவ அதிகாரிகள் ஆகியோர்களுக்காகவும் வசதிமிக்க ஒன்பது ட்ரக்குகளை ரயில்வே ஒதுக்கியுள்ளது.

## டிச. 13, 14 தேதிகளில் தஞ்சை நகரில்

# தமிழ்நாடு குத்தகை, வார விவசாயிகள் சிறப்பு மாநாடு

தமிழ்நாடு குத்தகை, வார விவசாயிகள் சிறப்பு மாநாடு வருகிற டிச, 13, 14 தேதிகளில் தஞ்சை நகரில் சிறப்புற நடக்கவிருக்கின்றது.

பிரதிநிதிகள் மாநாடு தஞ்சை நகர் இராமநாதன் செட்டியார் மன்றத்திலும் பொது மாநாடு 14—12—75 மாலை 6 மணிக்கு தஞ்சை திலகர் திடலிலும் நடக்கும்.

இந்தியத் தொழிற்சங்க மையத்தின் (சிஐடியூ) பொதுச்செயலாளர் தோழர் **பி. ராமமூர்த்தி** இம்மாநாட்டில் கலந்து கொள்கிறார்

தமிழ்நாடுமுழுவதிலுமிருந்து 500 பிரதிநிதி மாநாட்டில் கலந்து கொள்கிறார்கள்:

- விவசாயிக்கு நஞ்சையில் 75 சதவீத வாரமும், புஞ்சையில் 80 சதவீத வாரமும் வழங்குதல்.
- இதுவரை, குத்தகைதாரர் பதிவேட்டில் பதியாமல் விடுபட்டிருப்பவர் விஷயத்தில், ஸ்தல விசாரணை செய்து வாய்மொழி சாட்சியத்தையும் ஏற்று, 1969ல் கைவசம் நிலம் வைத்திருந்தவர் அனைவரையும் சேர்த்து குத்தகைப் பதிவேட்டில் பதியச் செய்தல்,
- குத்தகை பாக்கிக்காக நிலவெளியேற்றம் செய்வதைத் தடை செய்தல்,
- 'அறக்கட்டளை' என்ற பெயரில் சொந்தப் பண்ணை வைப்பதைத் தடுத்தல் —ஆகிய கோரிக்கைகள் குறித்து இம்மாநாட்டில்திட்டமிடப்படும்

மாநாட்டுக்கு வரும் பிரதிநிதிகள் உணவுக் கட்டணமாக ரூ.5 ம், பிரதிநிதிகள்கட்டணமாக ரூ 1 ம் ஆக மொத்தம் 6 ரூபாய் செலுத்த வேண்டும்.

இம்மாநாட்டை வெற்றிகரமாக நடத்திட வரவேற்புக்குழு ஒன்று அமைக்கப்பட்டு செயல்பட்டு வருகிறது.

எனவே, தொடர்புகொள்ள விரும்பும் தோழர்கள்,

செயலாளர்,<br>
வரவேற்புக் குழு,<br>
6/ஏ கொன்டிராஜபாளையம்<br>
தஞ்சை

—என்ற முகவரிக்கு எழுதும்படி கேட்டுக்கொள்கிறேன்

இப்படிக்கு,<br>
**கோ. வீரய்யன்**<br>
செயலாளர்—தமிழ்நாடு விவசாயிகள் சங்கம்




## ஜப்பானில் தொடர்கிறது

# பொதுத்துறைத் தொழிலாளர் ஸ்டிரைக்

### ரயில்கள் ஆங்காங்கே தூங்குகின்றன

டோக்கியோ, நவ. 28—

ஜப்பான் நாட்டில் 26-ந் தேதி வெடித்த வேலை நிறுத்தம் கடந்த மூன்று நாட்களாக அந்நாட்டையேஸ்தம்பிக்கச் செய்துள்ளது.

மூன்று நாட்களாக ரயில் போக்குவரத்து முற்றிலும் ஓடவில்லை. வேலை நிறுத்தம் ஆரம்பிக்கும் போது ஆங்காங்கே நிறுத்தப்பட்ட ரயில்கள் அப்படியே தூங்குகின்றன; ஜப்பான் முதலாளித்துவப் பொருளாதாரம் கலகலத்துக் கொண்டிருக்கிறது.

ரயில்வேதொழிலாளர்கள் உட்பட எட்டரை லட்சம் பொதுத்துறை தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் இறங்கியுள்ளனர்.

தொழிலாளர்களின் வேலைநிறுத்த உரிமையை இதுவரை ஜப்பான்அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவில்லை. ஜப்பான்அரசின் அகம்பாவ போக்கைஎதிர்த்தே வேலை நிறுத்தஉரிமைகோரிதொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்கின்றனர்.

இவ் வேலைநிறுத்தத்தை 10நாட்கள் நீடிப்பதென பொதுத்துறை, அரசுத் தொழில் தொழிலாளர் சங்கக் கவுன்சில் முடிவுசெய்துள்ளது.

இப்போராட்டம் மக்களுக்கும் ஜனநாயகத்துக்கும் எதிரானது என்றார் அந் நாட்டு பிரதமர் [illegible].

## இராக்கிற்கு திரும்புமாறு இஸ்ரேல் யூதர்களுக்கு அழைப்பு

பெய்ரூட், நவ, 26—

இராக் நாட்டிலிருந்து இஸ்ரேல்நாட்டிற்கு 1948 ம் ஆண்டுமுதல் சென்ற யூதர்களெல்லாம் தாய்நாடு திரும்புமாறு இராக் அரசாங்கம் அழைத்துள்ளது.

இராக் நாட்டுபிரஜைக்குரிய அரசியல்சட்ட உரிமையோடு திரும்பி வரலாம் என்றும் அழைப்புவிடுத்துள்ளது.

இராக் அரசாங்கம் ஒரு அறிக்கையின் மூலம் மேற்கண்ட அழைப்பை விடுத்துள்ளது.

மேலும், இஸ்ரேலிலிருந்து இராக் நாட்டிற்கு திரும்பும் யூதர்களுக்கு 'சமத்துவமும் பாதுகாப்பும்' அளிக்கப்படும் என இராக் அரசாங்கம் கூறியுள்ளது.

## வளர்ச்சியடையும் நாடுகள்

# கூட்டுத் தொழிலை ஏற்க வேண்டுமாம்

### தொழில் இலாகா செயலாளர் கூறுகிறார்

பெங்களூர், நவ. 28—

ஒரு நாட்டின் தொழில் நுணுக்கம் மற்ற நாடுகளுக்கு செல்ல வேண்டுமானால், கூட்டுத்தொழில் ஆரம்பிப்பது அவசியம். எனவே இருநாடுகள் கூட்டு தொழில் ஆரம்பிப்பது என்ற கொள்கையை வளர்ச்சியடையும் நாடுகள் ஒப்புக் கொள்ள வேண்டும் என்று வளர்ச்சியடையும் முதலாளித்துவ நாடுகளிலேயே மிகப்பெரிய நாடான இந்தியா கூறியுள்ளது.

பதினைந்து வளர்ச்சி அடையும் நாடுகளின் பிரதிநிதிகள் பெங்களூரில் உள்ள எய்ச். எம். டி. தொழிற்சாலையின் தொழில் நுணுக்கத்தை பார்வையிட்டனர். அவர்களிடையே பேசிய இந்திய தொழில் அமைச்சக இலாகா செயலாளர் சொந்தி மேற்கண்டவாறு கூறினார்.

அவர் மேலும், இந்தியா இதுவரை அன்னிய நாடுகளில் 204 கூட்டுத் தொழில்களை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறது. அவைகளில் 85 உற்பத்தியை ஆரம்பித்து விட்டன என்று கூறிய ஸொந்தி மேலும் என்னைப் பொறுத்தவரையில், இந்த திசைவழியில் [இவ்வாறு கூட்டுத்தொழில் அமைத்துக் கொள்வதில்] வளர்ச்சியடையும் நாடுகளுக்கிடையே போதுமான கவனம் ஏற்படவில்லை என்றும் கூறினார்.

மேலும், இந்தியா பரந்த அளவில் வளர்ச்சியடைந்த எஞ்சினியரிங் தொழில் நுட்பத்தையும் அனுபவத்தையும் கொண்டுள்ளது என்றும் கூறினார். அவைகளையெல்லாம் இந்தியா ஏனைய வளர்ச்சியடையும் நாடுகளுக்கிடையே பகிர்ந்துகொள்ள விரும்புகிறதாம்.

இந்தியாவில் பெரும்பாலான மூலப்பொருட்கள் கிடைக்கின்றன. இது இந்தியாவின் வளர்ச்சியடைந்த தளமாக உள்ளது. அது மட்டுமல்லாமல், அனுபவம், தொழில்நுணுக்கம், நிர்வாகம் ஆகியவற்றிலும் திறமை கொண்டுள்ளது இந்தியா. இவைகளெல்லாம், வேகமான சுயவளர்ச்சிக்கும் சுயபல கொள்கைக்கும், அவசியமானவை என்றும் திருவாளர் ஸொந்தி கூறினார் (128வருடமாகசுயவளர்ச்சி பற்றியும் சுயபலக் கொள்கை பற்றியும் பேசப்படுகிறது, உள்நாட்டில் 70 சதவீதம் பேர் அரைப்பட்டினி, முழு பட்டினியாக கிடக்கும் நிலைமாறவில்லை. அமெரிக்காக்காரனை தொண்ணூந்து கொண்டிருக்கும் நிலையும் மாறவில்லை சுயவளர்ச்சி, சுயபலம்பற்றி சவடாலுக்கு குறையவில்லை] மேலும் அவ்வெளிநாட்டு பிரதிநிதிகளிடம் அன்னிய நாடுகளுக்கு அனுப்பும் வகையில் சோவியத் யூனியனுக்கும் அமெரிக்காவுக்கும் அடுத்தபடியாக- 3-வது நாடாக — ஏராளமான டாக்டர்களையும் எஞ்சினியர்களையும் விஞ்ஞானிகளையும்கொண்ட நாடு இந்தியாதான் என்று டமாரம் அடித்துக்கொண்டார், (திரு சொந்தி சொல்வதும் உண்மைதான் சொத்துக்களையெல்லாம் விற்று படித்து டாக்டர்களாகவும் என்சினியர்களாகவும் பட்டங்களை வாங்கிக் கொண்டு வேலைக்காக வீதியில் அலைபவர்கள் இந்தியாவில் அதிகம்தானே)

வளர்ச்சியடையும் நாடுகள் தங்களுடைய தொழில் வளர்ச்சியைப் பெருக்கிக் கொள்ளவும் பொருளாதாரத்தை பலப்படுத்தவும் வளர்ச்சியடைந்த நாடுகளிடம் பெரும் அளவில் கடனுதவி பெறுவதால் அதில் பெரும்பாலும் பிரயோஜனம் ஏற்படவில்லை என்றும் ஸொந்தி கூறினார்.

[மீன் பிடிப்பதற்கும் குளம் வெட்டுவதற்கும்கூட அமெரிக்காவிடம் கடன் பெறுவது இந்தியா, அது மட்டுமல்லாமல், இந்தியாவில் தொழில் நடத்த வருமாறு அமெரிக்க முதலாளிகளை அழைக்கசவானும், சுப்ரமணியமும் மாறி மாறி அமெரிக்கா பயணம்; மற்ற மந்திரிகள் மற்ற நாடுகளுக்கு பயணம்.

இந்நிலையில் வளர்ச்சியடைந்தநாடுகளின் உதவி பற்றி வளர்ச்சியடையும் நாடுகளுக்கு உபதேசத்தின் அர்த்தம் என்னவோ?

## அருப்புக்கோட்டையில்

# நெசவாளர் போராட திட்டம்

அருப்புக்கோட்டை, நவ. 28—

இங்குள்ள கைத்தறி மாஸ்டர் வீவர்கள், கைத்தறி தொழிலாளர்களின் கூலியை குறைத்ததின் தொடர்ச்சியாக 5-12-75-ல் அத்தொழிலாளர்கள் உண்ணாவிரதப் போராட்டம் ஆரம்பிப்பதுஎன தீர்மானித்துள்ளனர்.

மாஸ்டர் வீவர்கள் பாவுக்கு ரூ 10 வீதம் கூலியைக் குறைத்தனர். இதனை எதிர்த்துப் போராடும் பொருட்டு சர்வகட்சி கமிட்டி அமைக்கப்பட்டது.

அக்கமிட்டியின் பிரதிநிதிகளும் நெசவாளர்கள் 300 பேரும் தாசில்தாரிடம் மகஜர் கொடுத்தனர். பேச்சுவார்த்தைக்கு ஏற்பாடு செய்வதாக தாசில்தார் கூறினார்.

ஆனால் மாஸ்டர்வீவர்களோடும் தொழிலாளர் பிரதிநிதிகளோடும் தனித்தனியே பேசும்முறையைக் கையாண்டார், இதற்குத் தொழிலாளர் பிரதிநிதிகளின் தரப்பில் எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டது. முத்தரப்பு பேச்சுவார்த்தைக்கு ஏற்பாடுசெய்யுமாறு தொழிலாளர் பிரதிநிதிகள் சொன்னர். தாசில்தார் அதைஏற்கவில்லை 18ந் தேதி காலை 11 மணிக்கு மாஸ்டர் வீவர்களோடு பேச்சுவார்த்தை நடத்திய தாசில்தார் அன்று மாலை தொழிலாளர் பிரதிநிதிகளை சந்தித்தார், குறைக்கப்பட்ட கூலியில் பாதியைத் தருவதாக மாஸ்டர் வீவர்கள் கூறுவதாகக் கூறினர்.

இதனை தொழிலாளர் பிரதிநிதிகள் ஏற்றுக்கொள்ளவில்லை 21-ந் தேதியன்று முத்தரப்புபேச்சு வார்த்தை நடைபெற்றது; அதில் குறைந்த கூலியில் பாதியை உயர்த்துவது என்பதில் மாஸ்டர் வீவர்கள் பிடிவாதமாக இருந்தனர்,

எனவே, தொழிலாளர்கள் போராடுவதென முடிவு செய்தார்கள்.

25—11—75-ல் நடைபெற்ற சர்வகட்சி நெசவாளர் கமிட்டிக்கூட்டத்தில் 5—12—75-ல் தாசில்தார் அலுவலகம் முன்பு உண்ணாவிரதம் இருப்பதென முடிவு செய்யப்பட்டுள்ளது, இதற்கிடையில் அருப்புக்கோட்டை வரவிருக்கும் முதல் அமைச்சரையும் தொழிலாளர் பிரதிநிதிகள் சந்திப்பதென தீர்மானிக்கப்பட்டது.

25—12—75 லிருந்து தொடர் உண்ணாவிரதமிருப்பதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றனஎதிர்த்துபோராடும் பொருட்டு சர்வகட்சி கமிட்டிகள் அமைக்கப்பட்டன.

# உ.பி.முதல்வர் பஹுகுணா விழுந்தார்

## பிரதமராலும் காக்க முடியாத அளவுக்கு காங்கிரஸ் கட்சிக்குள் குத்துவெட்டு

புதுடெல்லி. நவ. 29—

உத்தரப்பிரதேஷ் முதலமைச்சர் எச். என். பகுகுணா ராஜினமாச் செய்துவிட்டார். கவர்னர் சென்னரெட்டியும் அவரது ராஜினமாவை ஏற்றுக் கொண்டுவிட்டார். நிலையான ஆட்சியை நிறுவிட காங்கிரஸ் கட்சியினல் தான் முடியுமென்று அயராது பிரச்சாரம் செய்துவந்த ஆனல் காங்கிரஸ் கட்சியின் மந்திரிசபையே நிலைகுலைந்து விழுந்து விட்டது.

முதலமைச்சர் ராஜினமா செய்துவிட்டால் காங். சட்டமன்றக்கட்சி கூடி, தங்களுக்குள் ஒரு புதிய முதலமைச்சரையும், புதிய மந்திரி சபையையும் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்; ஆயினும் அவ்வாறு தேர்ந்தெடுத்துக் கொள்ளவும் முடியாதபடி, காங்கிரஸ் கட்சிக்குள் குத்து வெட்டுகள் அத்துமீறி விட்டதால் சட்டசபையையே கலைத்து, ஜனதிபதி ஆட்சிக்கு வழி கோலப்பட்டு விட்டது.

### மேலிடத்து ஆள்

ராஜினமாச் செய்துள்ள முதல்வர் பகுகுண, பத்திரிகை நிருபர்களிடம் பேசுகையில், "நான் எப்பொழுதுமே மேலிடத்தார்விருப்பப்படியே முதலமைச்சராக இருந்து வந்துள்ளேன். மேலிடம் தான்என்னைஉத்தரப்பிரதேசத்துக்கு அனுப்பி வைத்தது. இப்பொழுதும் மேலிடத்தின் அனுமதியுடன்தான் நான் வெளியேறுகிறேன்'' என்று கூறினர்.

உத்திரப்பிரதேசத்தில் காங்கிரஸ் கட்சிக்குள் ஏற்பட்ட ரகளையின் விளைவாக 1973 ஜூனில் முதலமைச்சராக இருந்த கமலபதி திரிபாதி ராஜினமா செய்ய நேரிட்டது.

மூன்று மாதங்கள் கழித்து நடந்த சட்டமன்றத் தேர்தலில் காங்கிரஸ் கட்சி முழு மெஜாரிட்டி பெறவில்லை. அப்போது காங்கிரஸ் கட்சிக்கு வலது கம்யூனிஸ்ட் கட்சி ஆதரவு கொடுத்ததின் பேரில், பகுகுண முதலமைச்சராக 1973 நவம்பரில் ஆனர். சரியாக 2 ஆண்டுகள் கழித்துப் பகுகுண விழுந்தார். ஆரம்பத்தில் இந்த பகுகுண வலதுசாரிசக்திகளின் ஒரு தூணாக விளங்கினர். பிறகு இவருக்கு ஞானஸ்நானம் கொடுத்து முற்போக்குச் சாயம் பூசினர்கள்.

பகுகுண ராஜினமாச் செய்வதற்கு சில நாட்களுக்கு முன்னர் காங்கிரஸ் தலைவர் டி கே பருவா அவரிடம், "நீங்கள் தொடர்ந்து பதவியில் இருப்பதை காங்கிரஸ்கட்சியிலுள்ள பெரும்பாலார் கடுமையாக எதிர்ப்பதால் ராஜினமா செய்துவிடுங்கள்'' என்று புத்தி சொன்னராம். அதன் பேரில்தான் புதுடில்லிக்கு சென்று பிரதமர் இந்திரா காந்தியைச் சந்தித்து, மனம் விட்டுப் பேசிய பிறகு, ராஜினமா செய்தாராம். ராஜினமா செய்தியை அறிந்தவுடன் பிரதமர், குடியரசுத்தலைவர் பக்ருதீன் அலியைக் கண்டு பேசியுள்ளார். அரசியல் சட்டம் 356-வது விதிப்படி உ. பி. யில் ஜனதிபதி ஆட்சி ஏற்படுத்துவது பற்றி மத்திய மந்திரிசபை ஆலோசனை நடத்தியதாகத் தெரிகிறது.

### திருகல்முறுகல் நிலை

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே உ பி யில் போலீசார் வேலைநிறுத்தம் செய்தபோது, முதலமைச்சராக இருந்த கமலபதி திரிபாதியை ராஜினமா செய்ய வைத்து மத்திய மந்திரி சபைக்கு இழுத்துக்கொண்டு டில்லியில் செய்திப் போக்குவரத்து மந்திரியாக இருந்த பகுகுணவை உ பிக்கு அனுப்பினர் இந்திரா. இப்போதும் அதுபோல பகுகுணவை திருப்பி அழைத்துக்கொண்டு, அவரது இடத்துக்கு ஒரு மத்திய மந்திரியை அனுப்பி வைத்து, நிலைமையை சமாளிக்கலாமா என்று நினைத்தார் இந்திரா.

ஆனல் உ. பி. நிலைமை ஒரு அலாதியான திருகல் முறுகல் நிலைமையாகும். கட்சியிலே மூத்தவரானஉமாசங்கர் தீட்சிதர் வந்தாலும்சரி நிருவாகநிபுணர் என்று கருதப்படும் கே. சி பந்தே வந்தாலும் சரி, நிலைமையைச் சமாளிக்க முடியாது. அவ்வளவு குப்பை கூளங்களும் சண்டை சச்சரவுகளும் குவிந்து கிடக்கின்றன!

### ஆணவம் பிடித்தவர் சர்வாதிகார வெறியர்

பஹுகுணவை இந்திரா காந்தி 'முற்போக்கு' என்று மெச்சினலும், காங்கிரஸ் கட்சிக்குள் அவரைப்பற்றி, மண்டைக்கனம் பிடித்த ஆணவக்காரர் என்றும் நெப்போலியன் என்று தன்னை நினைத்துக் கொண்டு சர்வாதிகார ஆட்டம் போடுகிறவர்என்றும் சகலமும் தானே என்று காட்டிக்கொள்ள விரும்பும் பேராசைக்காரர் என்றும் பட்டம் கிடைத்திருக்கிறது.

சகல பிணிகளையும் தீர்க்க வல்ல சஞ்சீவிமலைசாமி என்றுபஹுகுணவை உச்சாணிக்கு ஏற்றி போற்றுவதில் சில மூட நண்பர்கள் ஈடுபட்டார்கள். பலவிதமான நெருக்கடிகளுக்கு ஆளாகித்தவிக்கும் மக்களுக்கு இந்த ஏற்றலும் போற்றலும் வெறுப்பையே மூட்டின.

இதனல் இடதுசாரிகளின் ஆதரவைப் பெறவும், சோஷலிச மூர்த்திபோலகாட்சியளிக்கவும் திடீரென தீவிரவாதியானர். அவர் முன்பெல்லாம் வலதுசாரிப் பிண்டம் எனப் பேர் வாங்கியவர்.

### நாலாவது ராஜினமா

காங்கிரஸ் கட்சிக்கு உ பி யில் மெஜாரிட்டியிருந்தும், இதுவரையில் கடந்த 15 ஆண்டுகளில் 4 முதலமைச்சர்கள் ராஜினமாச்செய்துள்ளார்கள்.

சம்பூர்ணனந்தா, சி பி குப்தா, கமலபதி திரிபாதி நாலாவதாக பகுகுண ஆகியோர் மெஜாரிட்டியிருந்தும் ராஜினமா செய்ய நேரிட்டவர்களாவர்,

## ஆள்குறைப்பு அரசு ஸ்தாபனமே நடத்துகிறது

ஆமதாபாத், நவ.28—

குஜராத்மாநிலத்தில் உள்ள தேசியமயமாக்கப்பட்ட 10 நெசவாலைகளில் 2900 தொழிலாளர்ஆட்குறைப்பு செய்யப்படவிருக்கின்றனர் என தேசியபஞ்சாலை கார்பரேஷன் தலைவர் பி பி சிங்ளா ஆமதாபாத்தில் நவ. 26 ல் கூறினர். இக்கார்பரேஷன்மத்தியஅரசின் கட்டுப்பாட்டில் உள்ளது மேலும் சிங்ளா பேசுகையில், இப்பத்து ஆலைகளிலும் - சீரமைப்பை செயல்படுத்துவதன் காரணமாக 2900 பேர் உபரியாகும் நிலை ஏற்படும். இவர்களில்,முதல் கட்டமாக 852 பேர் நீக்கப்படுவர் என்றும் கூறினர்.

# தீக்கதிர்

## குஜராத்

# முனிசிபல் தேர்தல்கள் அளிக்கும் படிப்பினை

சென்ற மாதம் குஜராத் மாநிலத்தின் ஒரு முக்கிய நகரமான ராஜ்கோட்டில் நகரசபைத் தேர்தல் நடந்தது. குஜராத் மாநில ஆட்சிப் பொறுப்பிலிருக்கும் ஜனதா முன்னணிக்கும் இந்திரா காங்கிரசுக்கும இடையேதான் போட்டி. இறுதியில் 51 ஸ்தானங்களில் 32ஐ ஜனதா முன்னணி வென்றது. காங்கிரசுக்கு கிடைத்தது 19 ஸ்தானங்கள்தான். காங்கிரஸ் கட்சியின செல்வாககு கடந்த தேர்தலுக்குபிறகு மேலும் சரிந்துள்ளதையே இது எடுத்துக் காட்டியது.

ஆயினும் "ஒரு மாம் தோப்பாகாது." ஒரு ராஜ்கோட் முனிசிபல தேர்தலிலிருந்து காங்கிரஸ் பலவீனபபட்டு விட்டதென்ற முடிவுக்கு வரவேண்டாமென்றுகூறின காங்கிரஸ் வட்டாரங்கள். ஆனல் சென்றவாரம்குஜராத்தின் வேறு இரு பெரிய நகரங்களான சூரத், பரோடா ஆகியஇரு இடங்களிலும் நடந்தேறிய முனிசிபல் தேர்தல்முடிவுகள் காங்கிரஸ்கட்சியின் தேய்பிறைப் படலம் மேலும் நீடிக்கும்என்று கோடிட்டுக் காட்டுகிறது. டிசம்பர் 28ம நாள் நடக்கின்ற அகமதாபாத் நகர முனிசிபல தேர்தலிலும் காங்கிரஸ் கட்சி தோல்வியுற்ருல் ஆச்சரியப்படுவதற்கு இல்லை.

சூரத்தில் 65 ஸ்தானங்களில் காங்கிரசுக்குக் கிடைத்த ஸ்தானங்கள் 16; ஜனதா முன்னணிக்குக்கிடைத்தது 49. பரோடாவில் 60 ஸதானங்களில் காங்கிரசுக்கு 13 ஸ்தானங்களும், ஜனதா முன்னணிக்கு 46 ஸ்தானங்களும் கிடைத்துள்ளன. ஜனதா முன்னணிக்குக் கிடைத்த ஸ்தானங்களில் நான்கில் ஒரு பங்கு அல்லது மூன்றில் ஒரு பங்குதான் காங்கிரஸ் பெற முடிந்திருக்கிறது. இந்தக் கட்சிதான் இந்தியாவின் மையத்தில் அரசு செலுத்தி வருவதோடு, இந்தியாவைத் தொடர்ந்து ஆளுவதற்கு தன்னை விட்டால் வேறு எந்தக் கட்சிக்கும் தகுதியில்லை என்று இடைவிடாது ஜம்பம் அடித்துக் கொண்டு வரும் கட்சி.

சூரத்,பரோடா நகரங்களில் வெற்றிகாண்பதற்குத் தனது சகல சக்திசாத்தியப்பாடுகளையும் செல்வாதாரங்களையும் காங்கிரஸ் கட்சி பயன்படுத்தியது என்று கூறத் தேவையில்லை, அது மட்டுமின்றி இத்தேர்தல்களுக்கு சற்று முன்புதான் முன்ஞள் காங்கிரஸ் முதலமைச்சராக இருந்து ஸ்தாபனகாங்கிரஸ் கட்சியிலிருந்து ஓடிப்போய் இந்திரா காங்கிரசில் சேர்ந்து, குஜராத் மாநில காங்கிரஸ் கமிட்டியின் தலைவராக ஏகமனதாக ஏற்றுக்கொளளப்பட்ட ஹிதேந்திர தேசாய் ஜனதா முன்னணியை தோற்கடிக்க அரும்பாடு பட்டார், பல கூட்டங்களில் காங்கிரசுக்காக பிரசாரம் செய்தார். ஸ்தாபன காங்கிரசிலிருந்து கூட்டம் கூட்டமாய் ஆட்கள் வெளியேறி இந்திரா காங்கிரசில் சேர்ந்துவிட்டனர் என்று அறிக்கைகள் விடுத்தார், ஜனதா முன்னணி ஆட்சிக்கு ஆதரவு நல்கிய கிசான் மஜ்தூர் லோகபக்ஷ் கட்சியிலிருந்து சிலர் காங்கிரசுக்கு போய் விட்டதாகவும் கூறிஞர். ஆனல் இறுதியில் ஹிதேந்திரதேசாய் தான் தோல்வி கண்டார், அவருடைய சொந்த ஊரான சூரத்திலேயே அவரது காங்கிரஸ் கட்சி முற்ருக நிராகரிக்கப்பட்டது.

ஜனதா முன்னணி கரைந்து வருகிறது என்று ஹிதேந்திர தேசாய் பேசி வந்ததும் அவற்றைக் கூசாது வெளியிட்ட பத்திரிகைகளும் உண்மை நிலைமையை எவ்வளவு தூரம் மக்களிடமிருந்து மறைந்தன என்பதை இத் தேர்தல முடிவுகள் அம்பலமாக்கியுள்ளன. ஒரு மாநிலத்தில் மூன்று முக்கிய மாநகரங்கள் தொடர்ந்து இந்திரா காங்கிரஸை நிராகரித்தன என்பது தற்செயலானநிகழ்ச்சியல்ல. ஹிதேந்திர தேசாயே காங்கிரஸ் படுதோல்வியடைந்துள்ளது என்று ஏற்றுக்கொள்ளவேண்டி வந்துள்ளது.

இந்தத் தேர்தல் முடிவுகளிலிருந்து எழும் படிப்பினைகள் தெளிவானவை. அவசர நிலைப்பிரகடனமும, 20 அம்சத் திட்டமும பிரஜா உரிமைகளைப் பறிப்பதும எதிர்க்கட்சிகளுக்கு சிறைவாசத்தை வழங்கி, பார்லிமெண்டரி ஜனநாயக உரிமைகளைக் கூட அவர்களுக்கு மறுப்பதும் இந்திரா காங்கிரசின் செல்வாக்கை உயர்த்தவில்லை. அதற்கு மாருக காங்கிரஸ் கட்சியின் மீது வெறுப்பைத்தான் மக்களிடம் அதிகரித்துள்ளது. இந்தத் தேர்தல முடிவுகள் இந்திரா காங்கிரசின் நடவடிக்கைகளும் கொள்கைகளும் மக்களிடம் செல்லுபடியாகவில்லை என்ற மக்களின் தீர்ப்புமாகும்.

இந்தப் பகைப்புலனில் பார்த்தால் அவசரநிலைமை ரத்துச் செய்யப்பட்டு சிறைப்படுத்தப்பட்டவர்களெல்லாம் விடுவிக்கப்பட்டு, பிரஜா உரிமைகள் பரிபூரணமாக வழங்கப்பட்டு எத்தகைய அரசாங்க நிர்ப்பந்தங்களோ தலையீடுகளோ அடக்குமுறைகளோ இல்லாமல், நாடெங்கும் தேர்தல்கள் நடத்தப்பட்டால்எண்ணற்றமாநிலங்களில் குஜராத் முனிசிபல் தேர்தல்கள் மாதிரி எதிர்க்கட்சிகளே வெற்றிகாணும் வாய்ப்புண்டு என்பது தெளிவு. அத்தகைய நிலைமையில் கேரளத்திலும், மேற்கு வங்கத்திலும், திரிபுராவிலும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியே முதல் பெருங்கட்சியாக மக்களால் தேர்ந்தெடுக்கப்படுமென்பதில் ஐயமில்லை. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை முடக்கி வைப்பதில் ஆளும்காங்கிரஸ்கட்சி பிரத்தியேக கவனம் செலுத்தி வருவதில் ஆச்சரியமில்லை.

ஆனல், அவசர கால நிலைமைப் பிரகடனமும், அதையொட்டிப் பிறந்த அவசரச் சட்டங்களும் இன்னபிற நடவடிக்கைகளும் காங்கிரஸ் கட்சியை பலப்படுத்துவதற்கு பதிலாக பலவீனப்படுத்தியே உள்ளன. இந்திரா காங்கிரஸ் கட்சியும் அவர்களது மத்திய ஆட்சியும் குஜராத் தேர்தல் முடிவுகளிலிருந்தாவது இந்தப் பேருண்மையை உணர்ந்து, அங்கீகரித்துத் தங்களது கொள்கைகளை மாற்றிக்கொள்வதே விவேகமானதாகும்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழுசார்பில், தீக்கதிர் அச்சகத்தில் (6-16 பைபாஸ் ரோடு மதுரை 625018) அச்சிட்டுவெளியிடுபவர் ஆசிரியர் எம். ஆர். வெங்கட்ராமன்.

# கல்லூரி ஆசிரியர்கள் வேலை நீக்கம்

## ஆசிரியர்களும் மாணவர்களும் கண்டன வேலைநிறுத்தம்

சங்கரன்கோவில், நவ. 29—

இங்குள்ள எம். ஜி.என். கலைக்கல்லூரியில் ஆசிரியர்கள் வேலைநீக்கம் செய்யப்பட்டதை எதிர்த்து, அக் கல்லூரி ஆசிரியர்களும் மாணவர்களும் கடந்த 25-ந் தேதியன்று அடையாள வேலைநிறுத்தம் செய்தனர்,

வேலைநீக்கம் செய்யப்பட்டுள்ள 3 ஆசிரியர்களையும் உடனே வேலைக்கு எடுத்துக்கொள்ளக்கோரும் மகஜர்களில் ஆசிரியர்களும் மாணவர்களும் கையொப்பமிட்டு மாநில அரசுக்கும் அதிகாரிகளுக்கும் அனுப்பியுள்ளனர்.

திருவாளர்கள் தங்கசாமி, கணேசன், வைகுண்டம் ஆகிய 3 ஆசிரியர்களையும் கல்லூரி நிர்வாகம் எவ்வித காரணமுமின்றி வேலை நீக்கம் செய்துள்ளது.

## முதலாளிகள் போக்கால் போனஸ் பேச்சு வார்த்தை ஒத்திவைப்பு

சங்கரன்கோவில், நவ, 29—

இங்குள்ள விசைத்தறி தொழிலாளர்களின் போனஸ்பிரச்சினை சம்பந்தமாக லேபர் ஆபீசர், மற்றும் அரசு அதிகாரிகள்முன்னல் நடக்கவிருந்த பேச்சுவார்த்தைகள், முதலாளிகளின் வக்கிரப் போக்கால் ஒத்திப் போடப்பட்டு வருவதாக தொழிற்சங்கத் தலைவர்கள் குற்றம் சாட்டினர்.

தொழிற்சங்கப்பிரதிநிதிகளும், விசைத்தறி உரிமையாளர்களும் போனஸ்பிரச்சினை சம்பந்தமாக லேபர் ஆபீசர் மற்றும் அதிகாரிகள் முன்னல்—அக். 29ந் தேதியன்று பாளையங்கோட்டையிலும், அக் 31ந்தேதி கோவில்பட்டியிலும், நவ12ல் சங்கரன்கோவிலிலும்பேச்சுவார்த்தைகள் நடத்துவது என்று நிச்சயிக்கப்பட்டிருந்தது.

ஆனல், இந்த மூன்று பேச்சு வார்த்தைகளுக்கும் விசைத்தறி உரிமையாளர்கள் வந்து கலந்து கொள்ளவில்லை. எனவே, மீண்டும் பேச்சுவார்த்தையை லேபர் ஆபீசர் ஒத்திவைத்துள்ளார்.

## போலீஸ் லாக்-அப்பில் கைதி சாவு

சென்னை,நவ. 29—

சென்னை திருவான்மியூர் போலீஸ் ஸ்டேசனில் காவலில் வைக்கப்பட்டிருந்த ரங்கநாதன் என்பவர் இறந்து போனர். நகரையடுத்த விருகம்பாக்கத்தைச் சார்ந்த இவரை திருவான்மியூர் போலீசார் திருட்டு வழக்கு சம்பந்தமாக கைது செய்து லாக்-அப்பில் அடைத்திருந்தனர்.

அவருக்கு அடிக்கடி காய்ச்சல் வருவது உண்டு என்றும், எனவே போலீஸ் காவலில் வைக்கப்பட்டிருந்த போது அவருக்கு காய்ச்சல் வரவே, நாட்டு வைத்தியரை அழைத்து அவருக்குமருந்து கொடுக்கப்பட்டதாகவும, ஆனலும் அவர் இறந்து போனதாகவும் கூறப்படுகிறது

இந்த மரணச் சம்பவம் குறிதது செங்கற்பட்டு கோட்டாட்சித் தலைவர் விசாரணை நடத்தி வருகிருர்.

# ஆசிரியருக்கு...

## ஊருக்கெல்லாம் ஒளி கொடுக்கும் உன்னத பணியில் ஈடுபட்டோரது குடும்பங்கள் ஒளியிழந்து கிடக்க வேண்டுமா?

ஐயா,

நெல்லை மாவட்டம் கோவில்பட்டி டிவிசனில் கடந்த இரண்டு ஆண்டுகளில மரணம அடைந்துள்ள மின்வாரியத் தொழிலாளர்களது குடும்பங்களுக்கு அரசாங்கத்திடமிருந்து போய்ச் சேரவேண்டிய எந்தத் தொகையும் இதுவரை போய்ச் சேரவில்லையாம்.

மரணம் அடைந்த தொழிலாளர்களது குடும்பங்களுக்கு குடும்ப நல நிதி ரூபாய்10ஆயிரம் மட்டுமல்ல, அத்தொழிலாளர்களிடம பிடிக்கப்பட்ட பிராவிடண்ட் பணமும் கூட இதுவரை கொடுக்கப்படவில்லை.

கோவில் சப் ஸ்டேசனில் பணிபுரிந்த திரு. பலவேசம், தெற்குப்பிரிவில் பணிபுரிந்ததிரு. இருளாண்டி கோவில்பட்டி நகர்ப்பிரிவில வயர்மேனுகப் பணிபுரிந்த திரு. வீரபாகு, எட்டயபுரம் பிரிவில் வயர்மேனுகப் பணிபுரிந்த திரு. கருப்பசாமி, ஒட்டப்பிடாரம பிரிவில் உதவியாளராகப் பணிபுரிந்த திரு பொன்னையா, புதூர் பிரிவில் லைனமேனுக பணிபுரிந்த திரு. பொனனுச்சாமி ஆகிய 6 பேர் கடந்த இரு வருடங்களில் மரணம் அடைந்துள்ளார்கள்.

இவர்களது குடும்பங்களுக்குச் சேரவேண்டிய பணம் இதுவரை போய்ச் சேரவில்லையாதலால் அத்தொழிலாளர்களது குடும்பங்கள் பட்டினி வாழ்க்கை நடத்திவருகிருர்கள். ஊருக்கெல்லாம ஒளிகொடுக்கும் பணியில் தம்மை அர்ப்பணித்து ஊழியம் புரிந்தவர்களது குடும்பங்கள் ஒளியிழந்து கலை இழந்து இருளடைந்துள்ளது கேவலமானது அல்லவா? இது இங்குமட்டுமல்ல. மின்சார வாரியத்தில் பணிபுரிந்த பல நூற்றுக்கணக்கான ஊழியர்களது குடும்பங்கள் ஆதரவற்ற நிலையில் நிர்க்கதியாய் நிற்கின்றன.

எனவே, இறந்த மின்சாரத் தொழிலாளர்களது குடும்பங்களுக்குச் சேரவேண்டிய எல்லாப் பணத்தையும் உடனே கொடுத்து- அக்குடும்பங்களைப்பாதுகாக்கும் நடவடிக்கையை தமிழக அரசும் மின்வாரியமும் உடனே மேற்கொள்ள வேண்டுகிருேம். இனியும் எதிர்காலத்தில் இந்த அவல நிலை ஏற்படாத வண்ணம் பார்த்துக் கொள்ளும்படியும் கேட்டுக் கொள்கிருேம்.

இவண,
சு. இராசாமணி
பொருளாளர்,
மின் ஊழியர் சங்கம்,
நெல்லை—11

# கட்டபொம்மன் கழக நிர்வாகத்தின் சண்டித்தனம்

## சி. ஐ. டி. யூ. கண்டனம்

மதுரை, நவ. 29—

பழிவாங்கப்பட்ட போக்குவரத்து தொழிலாளர்கள் மீதான நடவடிக்கைகளை வாபஸ் பெற்றுக் கொள்வதாக அமைச்சர்களும் அதிகாரிகளும் ஒப்புக் கொண்டுள்ளனர். ஆனல், நெல்லை—கன்னியாகுமரி மாவட்ட கட்டபொம்மன் போக்குவரத்துக் கழக நிர்வாகம் பழிவாங்குதலைத் தொடர்வது குறித்து சி ஐ டி யூ வின் தமிழ் மாநிலக் கமிட்டி செயலாளர் தோழர் ஏ.நல்லசிவன் கீழ்க்கண்ட அறிக்கையொன்றை வெளியிட்டுள்ளார்.

சம்பள உயர்வு கோரியும் ஜப்பான் திட்டத்தை எதிர்த்தும் மாநிலம் தழுவிய ஒரு வேலை நிறுத்தத்தை அரசு— கழகப்போக்கு வரத்துத் தொழிலாளர்கள் இவ் வருடம் மே—ஜூன் மாதங்களில் நடத்தியது யாவரும் அறிந்ததே. அதில் பங்கு கொண்டவர்களை, இடம் மாற்றம், தற்காலிக வேலை நீக்கம், கிரிமினல் வழக்குகளில் சம்பந்தப்படுத்துதல முதலியமுறைகளில் அரசும் கழக நிர்வாகங்களும் பழி வாங்கின.

### வேலைக்கெடுக்க மறுப்பு

சி ஐ டி யூ சங்கங்களின் இடைவிடாதநீண்டஇயக்கங்களுக்கும் முயற்சிகளுக்கும் பினனர் சில பழிவாங்கும் நடவடிக்கைகள் வாபஸ் பெறப்பட்டுள்ளன. மீத முள்ள வற்றையும் வாபஸ் பெறுவதாக அமைச்சரும் அரசு அதிகாரிகளும்ஒத்துக் கொண்டுள்ளனர்,

ஆனல், நெல்லை- குமரி மாவட்டங்களில் இயங்கிவரும் கட்டபொம்மன்கழகநிர்வாகம், வேலைநிறுத்தத்திற்குப்பிறகு வேலையிலிருந்து நிறுத்தப்பட்ட சுமார் 80 தினக் கூலித் தொழிலாளர்களை இன்னும் வேலைக்கு எடுக்க மறுத்து வருகிறது. சில வருட சர்வீஸ் உடைய இவர்கள் திறமையான டிரைவர்களும் கண்டக்டர்களுமாவர்.

### சகோதர ஆதரவு தருக

பஸ் ஓட்ட ஆள் இல்லை என்று, இதே கழக நிர்வாகம், திருநெல்வேலியிலுள்ள எம்ப்ளாய்மெண்ட் எக்சேஞ்ஜ் மூலம் புதிதாக ஆட்களை சேர்த்திருப்பதாகத் தெரிய வருகிறது. ஆனல் அதே நேரத்தில், சென்ற 6 மாதங்களுக்கு மேலாக வேலையும் சம்பளமுமில்லாமல் பட்டினி கிடக்கும் தினக்கூலித் தொழிலாளர்கள் மீது இன்னும் வன்மம் பாராட்டி, வேலைக்கு எடுக்க மறுத்து பழிவாங்கி வருகிறது.

நேரடி நடவடிக்கை தவிர அவர்களுக்கு வேறு வழியில்லாத நிலைமைஏற்பட்டுள்ளதால், தினக் கூலித் தொழிலாளர்கள், போராட்டத்துக்கு தயாரிப்பு செய்து கொண்டிருக்கின்றனர். அவர்களுககு சகல சகோதர ஆதரவும் தருமாறு எல்லா போக்குவரத்துத் தொழிலாளர்களையும் சி ஐ டி யூ சங்கங்களையும் கேட்டுக் கொள்கிறேன்.

## நவம்பர் புரட்சி விழா

சாத்தூர், நவ. 28—

சாத்தூர் அருகேயுள்ள என். சுப்பையாபுரத்தில் ஜோதிபாசு திடலில் கடந்த 24-ந் தேதி நவம்பர்புரட்சி விழாப் பொதுக்கூட்டமும் கலைநிகழ்ச்சியும நடந்தது. மதுரை மோட்டார் தொழிலாளர் தலைவர் விருதை எஸ். ஏ. பெருமாள், கட்சியின் சாத்தூர்தாலுகா செயலாளர் சி. செல்லச்சாமி, வெங்கிடு, கணேசன், நாராயணசாமி,சோலைசாமி,சக்தி ஆகியோர் பேசினர்.

இன்றைய அரசியல்நிலை குறிததும்,சுப்பையாபுரத்தில் மலிவுதான்யக்கடை மூலம் உணவுப் பொருட்கள் வழங்கப்பட்டு வந்தது நிறுத்தப்பட்டதைக் கண்டித்தும் மீண்டும் சப்ளைசெய்யக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இறுதியில் மதுரை குமார் குழுவினரின இன்னிசை நிகழ்ச்சி சிறப்பாக நடந்தது.

### சிவகாசி பகுதியில்

சிவகாசி பகுதியில் உள்ள ஜமீன் சல்வார்பட்டியில் நடந்த நவம்பர் புரட்சி தினவிழாவை யொட்டி மதுரை தியாகிமணவாளன் குழுவின் கலைநிகழ்ச்சி நடந்தது.

23-ந் தேதி சிவகாசியில் தோழர் அருணசலம் தலைமையில் நடநத நவம்பர் புரட்சி விழாவையொட்டி தியாகி மணவாளன் குழுவின் இன்னிசை நிகழ்ச்சி நடந்தது.

### பாப்பா உமாநாத்

சிவகாசியில் 26-ந் தேதியன்று தோழர் சோலையம்மாள் தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் ஜனநாயக மாதர் சங்க மாநிலச் செயலாளர் தோழர் பாப்பா உமாநாத் கலந்து கொண்டு பேசினர்.

இம் மூன்று கூட்டங்களிலும் கட்சியின் தாலுகாச் செயலாளர் எஸ்.செலலச்சாமி, பி. பாலசுப்ரமண்யம,ஜெ. லாசர் ஆகியோரும் மற்றும் ராமதாஸ், எம். பி. ராமச்சந்திரன் ஆகியோரும் பேசினர்.

## மின்வாரிய தொழிலாளர் ஊழியர் கூட்டங்கள்

சங்கரன்கோவில்,நவ 29—

நெல்லை மாவட்டம் சங்கரன் கோவிலில்மின்வாரிய வருவாய்ப்பிரிவு அலுவலகம் முன்பு வாயிற் கூட்டம் கடந்த 25 ந்தேதி நடந்தது.

சம்பள விகிதமாற்றம், தொழிலாளர்களது ஒற்றுமை ஆகியவை பற்றி அனைத்துச் சங்கங்களையும் சார்ந்த தலைவர்கள் பேசினர்.

கோவில்பட்டியில் மின்வாரிய சப்-ஸ்டேசன் அருகில் சி ஐ டி யூ விடம் இணைந்த மின ஊழியர் சங்கக்கூட்டம் நடந்தது.

மின்தொழிலாளர் சம்பளப்பிரச்னை பற்றியும் தொழிலாளர்களது ஒற்றுமையின அவசியத்தை வலியுறுத்தியும் சங்கப் பொதுச்செயலாளர் தோழர் து ஜானசிராமன் மற்றும் பல ஸ்தல தலைவர்கள் பேசினர்.

## கோமதிமில் போராட்டம் முதலமைச்சருக்கு சு. பாலவிநாயகம் தந்தி

திருநெல்வேலி, நவ. 29

நெல்லை மாவட்டம் வீரவநல்லூரில் உள்ள கோமதிமில் தொழிலாளர்களின் பிரச்சினையில் உடனே தலையிட்டு தொழிலாளருக்கு நியாயம் வழங்கக்கோரி தமிழக முதலமைச்சருக்கும், தொழிலாளர் நல அமைச்சருக்கும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாவட்டச் செயலாளரும், நெல்லை மாவட்ட பஞ்சாலை தொழிலாளர் சங்க துணைத் தலைவருமான தோழர் சு. பாலவிநாயகம் தந்திகள் அனுப்பியுள்ளார்.

இம்மில் தொழிலாளர்கள் போனஸ் மற்றும் நியாயமான கோரிக்கைகளுக்காக கடந்த 3 வார காலமாக வேலைநிறுத்தப் போராட்டத்தில் ஈடுபட்டுள்ளனர்!

## மொராக்கா— ஸ்பானிய சகார எல்லைகள் அழிக்கப்படுகின்றன

ரபாட், நவ. 28—

ஸ்பானிய சஹாராவுக்கும், மொராக்கா நாட்டிற்கு மிடையேயான எல்லை அழிககப்பட்டு விட்டது.

ஏற்கெனவே ஸ்பானிய சஹாராவை தன் ஆதிக்கத்தில் கொண்டிருந்த ஸ்பெயினும், அதனைபங்கு போட்டுக் கொள்ள முயற்சித்த மொராக்கா நாடும், மௌரிட்டானியா நாடும் கூட்டாக ஒரு அரசை ஏற்படுத்தியுள்ளனர் அல்லவா? அதனைத் தொடர்ந்தே எல்லை அழிப்பு நடைபெற்றுள்ளது. எனவே இனி மேல் இரு பகுதி மக்களும் எவ்விதத தடையுமின்றி சென்று வர முடியுமாம்.

இதனை ஸ்பானிய சஹாராவில் அமைக்கப்பட்டுள்ள முக்கூட்டரசின் உதவி கவர்னராக மொராக்கா அரசால் நியமிக்கப்பட்டுள்ள அகமது பென்சௌடா அறிவித்துள்ளார்.

## ரிமாண்ட் கைதி திடீர் சாவு!

கோவை, நவ. 29—

திருப்பூர் சப்—ஜெயிலில் காவலில் அடைக்கப்பட்டிருந்த சின்னராஜு என்ற இளைஞர் சிறையினுள்ளே இறந்து போனர். 29 வயதே நிரம்பிய அந்த இளைஞர் மீது மதுவிலக்குச் சட்டத்தின் கீழ் போலீசாரால்கைது செய்யப்பட்டு கடந்த 24ந் தேதியன்று ரிமாண்டில் அடைக்கப்பட்டிருந்தார்.

இவர் டி பி நோயினுல் கஷ்டப்பட்டதாகவும, அது சம்பந்தமாக 25, 26 தேதிகளில் டாக்டர் பரிசோதனை செய்ததாகவும. ஆனல் 26-ந் தேதி இரவில் இறந்து போனதாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது. இந்த மரணம்குறித்து கோட்டாட்சித் தலைவர் விசாரணை நடத்தி வருகிருர்.

## இன்சூரன்ஸ் ஊழியர்கள் சம்பளம், போனஸ் பகிஷ்காரம்

மதுரை, நவ. 28—

மதுரை டிவிஷனைச் சேர்ந்த ஆயுள் காப்பீட்டுக் கழக ஊழியர்கள் இன்று தங்களுடைய நவம்பர் மாத சம்பள பட்டுவாடாவை பகிஷ்காரம் செய்தார்கள்.

மத்திய அரசின் போனஸ் அவசரச் சட்டத்திற்கு எதிர்ப்பு தெரிவித்தே இப் பகிஷ்காரத்தைமேற்கொண்டனர்,

### பொதுகாப்பீட்டு ஊழியர்களின் பகிஷ்காரம்

மேலும், பொதுகாப்பீட்டு ஊழியர்கள் மதுரையிலும் 4 சதவீத போனசை தொடர்ச்சியாக பகிஷ்காரம் செய்துவருகின்றனர். அகில இந்திய இனசூரன்ஸ் ஊழியர் சங்கத்தின அறைகூவலுக்குஏற்ப போனஸ் பகிஷ்காரம் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

நிர்வாகத்துக்கும் ஊழியர்களுக்குமிடையே ஏற்பட்ட ஒப்பந்தப்படி 15 சதவீத போனஸ் பெற்று வந்தனர். ஆனல் போனஸ் அவசரச் சட்டத்தின் காரணமாக 4 சதவீத போனசே கொடுப்பதாக நிர்வாகத்தால் கூறப்பட்டது. இதனையே ஊழியர்கள் ஒற்றுமையுடன் பகிஷ்காரம் செய்து வருகின்றனர்.

மேலும் இரத்தப்பு ஒப்பந்தத்தை மதித்து போனஸ் அளிக்குமாறு அனைத்து ஆயுள் காப்பீட்டு ஊழியர்களும் அலுவலகங்களின்முன் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

## பிரிட்டனில் டாக்டர்கள் வேலைநிறுத்தம்

லண்டன், நவ. 28—

சம்பள உயர்வு கோரி பிரிட்டனில் ஆஸ்பத்திரிகளில் வேலை செய்யும் 19 ஆயிரம் டாக்டர்களில் பெரும் பகுதியினர் இன்று வேலைநிறுத்தம் செய்தனர்.

அவசர கேஸ்களுக்கு மட்டும் அவர்கள் மருத்துவம் அளித்தனர்.

மேலும் குறிப்பிட்ட நேரத்திற்கு மேல் டாக்டர் செய்யும் வேலைகளுக்கு கூடுதலான சம்பள உயர்வு கொடுக்க அரசாங்கம் மறுப்பதாலும் டாக்டர்களின் வேலை நிறுத்தத்திற்கு ஒரு காரணமாக அமைந்தது

கடந்த 27 ஆண்டுகாலச் சரித்திரத்தில் பிரிட்டனில் இப்படியொரு ஒற்றுமையான போராட்டத்தை அந்நாட்டு டாக்டர்கள் நடத்தியதே இல்லையாம்.

## பஞ்சாப் மாநிலத்தில் கட்டாய குடும்பக் கட்டுப்பாடு

சண்டிகார், நவ. 28—

இரண்டு அல்லது மூன்று குழந்தைகளுக்கு மேல் பெற்ற பெற்றோர்களுக்கு குடும்பக்கட்டுப்பாட்டுத் திட்டத்தை கட்டாயமாக்க பஞ்சாப் மாநில அரசு விரும்புகிறதாம். எனவே, அது சம்பந்தமான சட்டத்தை உண்டாக்க ஒரு நகல் மசோதாவை உருவாக்கும் பொருட்டு ஒரு உதவிக் கமிட்டியை ஏற்படுத்த அம் மாநில அரசு தீர்மானித்துள்ளது.

அம்மாநில சுகாதார குடும்பகட்டுப்பாட்டு அமைச்சர் பால்வீர்சிங் நிருபர்களிடையே தெரிவித்தார்.

மேலும், அந்த உதவிக் கமிட்டியில் பத்துப்பேர்இருப்பார்கள் என்றும் அக்கமிட்டிக்கு அவரே தலைவராக இருப்பார் என்றும் கமிட்டி தனது ரிப்போர்ட்டை 3 மாதத்திற்குள் அளித்து விடும் என்றும் அவர் கூறினர்

மேலும் குறைவாக குழந்தைகள் உள்ள குடும்பங்களுக்கு ஊக்கபோனஸ் கொடுப்பதற்கு அச்சட்டத்தில் வகை செய்யப்படுமாம்.

மேலும் இந்தியாவின் சராசரி பிறப்புவிகிதம் 1000 க்கு 36.6 ஆகும். ஆனல், பஞ்சாபில் 1000 க்கு 32 4 தான். இதனை 30.க்கு குறைககபஞ்சாப் அரசாங்கம் முயற்சிக்கப்போவதாகவும் அவர் அறிவித்தார்.

# நெசவுத் தெருவிலே....

— மணியரசன் —

காலையில் கட்டியது
மாலையில் அழுக்கென
சேலையை மாற்றும்
"பொம்மைச் சிங்காரிகள்"

சதிர்வைத்து நிற்கும்
ஜவுளிக் [கடல்சூழ்ந்த
மதுரையில் இந்த
வைகொலை நடந்தது!

நூலை நெய்து
நூறு டிசைன்களில்
சேலைகள் செய்வோர்
தெருவில் நிகழ்ந்தது!
சௌராஷ்டிரர்
தெருவில் நிகழ்ந்தது!

மாதர்கள் மகத்துவம்
வையகம் போற்றும்
போதிலே இந்தப்
புதுமையும் நடந்தது!

வாங்கு வாரின்றி
வண்ணத் துணிகள்
தேங்கிப் போனதால்
சிக்குப் பிடித்த
ஆலைக் கதவுகள்
அடைத்துக் கிடக்கும்
வேளையில் இந்த
விபரீதம் நடந்தது!

ஆமாம்,
"சேலைகள் இலவசம்
தீபாவளிக்காக"

புடவை கிடைக்கும்
என்ற சேதி
புதையல் கிடைக்கும்
சேதியாய்ப் பறந்தது!
தாலிப் பொன்னையும்
தட்டிப் பறித்தோர்
சேலைத் துணிக்கா
சேமிக்க விட்டார்?
ஆசைகள் நிர்வாணம்
ஆனது போலே
தேகம் நிர்வாணம்
ஆவதைத் தடுக்கும்
வேகம் விரட்ட
விரைந்தனர் பெண்கள்!

அங்கே

சிதறிப் போன
செவ்வந்திப் பூக்களில்
நசுங்கிச் செத்தது
பத்தொன்பது பேர்கள்!

தாகம்தணிக்கப் போனவர்கள்
தண்ணீர்விக்கிச் செத்தார்கள்

கோபியர் புடவையைப்
பறித்துக் கொண்டுபோய்
திரௌபதி தேவியின்
சேலையாய் வளர்த்த

நவபாரதக் கிருஷ்ணர்கள்
நைந்து உருகினர்

கந்தைத் துணிகளைக்
கட்டி மறைத்தோர்
மந்தையாய்க் கூடி
மடிந்த பின்னர்
பட்டுப் போர்த்தி
பன்னீர் தெளித்து
கொட்டும் முழக்குமாய்
கொண்டுபோய்ச் சேர்ந்தார்!

---

## போனஸ் சட்ட எதிர்ப்பு போராட்டத்தில் வலதுகள்

# முன்னணியில் நின்றார்களா?

அல்லது

# குறுக்கே படுத்தார்களா?

உழைக்கும்வர்க்கத்தின் மீது போனஸ் அவசரச் சட்டம் என்ற அம்பு ஏவி விடப்பட்டது.

இந்தியத்தொழிலாளிவர்க்கம் இதை முறியடித்தே தீரும். இச்சட்டத்தை வாபஸ் வாங்க வைத்தே தீரும். வாபஸ்வாங்க வைத்தே முடிக்கும்.........

சீறியெழுவோம், போராடி முறியடிப்போம்...எனவேதான்இந்தியக்கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநில நிர்வாகக்குழு தொழிற்சங்கங்கள் ஒன்றிணைந்து நடத்தவிருக்கும் தொழிலாளர் வேலைநிறுத்தப் போராட்டத்தை ஆதரிக்கத் தீர்மானித்தது.........

கம்யூனிஸ்ட் கட்சி இப்போராட்டத்திற்கு உறுதுணையாக மட்டுமல்ல, முன்னணியில் நிற்கும்"

வலது கம்யூனிஸ்ட் வாரஏடான "ஜனசக்தி"யின் 26—10—75ந் தேதி இதழில் அதன் ஆசிரியர் திரு. தா பாண்டியன் ஏவிய கணைகள் இவை.

'இந்தியத் தொழிலாளிவர்க்கம் இச்சட்டத்தை வாபஸ் வாங்க வைத்தே முடிக்கும்' என அவர் கூறியிருப்பது உண்மைதான். ஆனால் அதற்கான போராட்டத்தில் இந்தியக கம்யூனிஸ்ட் கட்சி, 'உறுதுணையாக மட்டுமல்ல; முன்னணியிலும நிற்கும்' என அவர் கூறியிருப்பது உண்மையா?

அப்படியானால் சில கேள்விகள்!

### கே. டி. கே. யின் சீர்குலைவு வேலைகள்

—மதுரையில் ஐ என் டி யூ சி, சி ஐ டி யூ உள்ளிட்ட அனைத்துத்தொழிற் சங்கக் குழுவின் தலைமையில் 24—10—75 தேதிய வேலை நிறுத்தம் வெற்றிகரமாக நடந்தது. வேலை நிறுத்தத்திற்கு முன், அந்தப் போராட்ட அணியிலிருந்து ஐ என் டி யூ சி யைப் பிரித்து வெளியேறச்செய்ய திரு கே டி கே தங்கமணி வெகு பாடுபட்டாரே—இது போராட்டத்திற்குமுன்னணியில் நிற்பதா அல்லது அதை சீர்குலைக்க முன்னணியில் நிற்பதா?

### கல்யாணசுந்தரம் சொன்னதென்ன?

24—10—75 தேதிய வேலை நிறுத்தத்தை வெற்றி பெறச் செய்ய கோவையில் அமைககப்பட்ட அனைத்துச் சங்க இணைப்புக் குழுவில் அங்குள்ள ஏ ஐ டி யூ சி சங்கம் சேர்ந்த காரணத்திற்காக கோவை மாவட்ட வலதுகம்யூனிஸ்ட் தலைவர் திரு பி கே ராமசாமி மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படுமென ஹார்வி மில் கேட்டில் நடந்த ஷிப்ட் கூட்டத்தில் கே டி கே தங்கமணி கர்ஜித்தாரே, இது என்ன போனஸ் எதிர்ப்பு போராட்டத்திற்கு உறுதுணையாக நிற்பதா அல்லது முதலாளிகளுக்கு பாதபூஜை செய்வதா?

24—10—75 தேதிய வேலை நிறுத்தத்தை சென்னையிலும் ஒன்றிணைந்து நடத்தலாம என்று தோழர் வி பி சிந்தன் திரு கல்யாணசுந்தரத்தை அணுகிய போது 24-ந் தேதிய வேலை நிறுத்தம் கோவை மாவட்டத்திற்கு மட்டும்தான் எனவும் சென்னையில் நடத்த ஒத்துக் கொள்ள முடியாது எனவும் திரு கல்யாணசுந்தரம் கூறினாரே—இது என்ன வேலை நிறுத்தத்தை ஆதரிப்பது என வலது கம்யூனிஸ்ட் கட்சி முடிவு செய்ததாக காட்டுகிறதா அல்லது இந்த வேலை நிறுத்தத்தை நடத்த விடாமல கோவையோடு கட்டுப்படுத்துவதற்கான முடிவை எடுத்துக் காட்டுகிறதா?

சென்னை பி அண்ட் சி மில்லில் எல்லா தொழிலாளர்களும் வேலைநிறுத்தம் செய்ய இருக்க அலுவலர்கள் மட்டும் வேலைநிறுத்தம் செய்யக்கூடாது என சங்கத் தலைவர் திரு ராமசாமி (ஏ ஐ டி யூ சி] வற்புறுத்தியதையும் மீறித்தானே வேலைநிறுத்தம செய்தார்கள்.

சென்னை ராயல் என்பீல்டில் சங்கத் தலைவரான ஐ என் டி யூ சி யைச் சேர்ந்த திரு. எஸ். எம். நாராயணனும் ஏஐடியூசியைச் சேர்ந்த அந்த சங்கத்தின் காரியதரிசியும எதிர்த்த போதிலும் அதையும் மீறி தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்தார்கள், இது போன்ற ஏராளமான நிகழ்ச்சிகள் பல மாவட்டங்களில் நிகழ்ந்துள்ளன.

### தொழிலாளிவர்க்கம் ஏற்காது

இவை அனைத்தும் எதைக்காட்டுகிறது? போனஸ் சட்டத்தை எதிர்த்து சீறியெழுந்தார்கள் எனபதைக் காட்டுகிறது, வலது கம்யூனிஸ்டுகளல்ல— தமிழ் நாட்டு தொழிலாளிவர்க்கம் சீறியெழுந்தது. வலது கம்யூனிஸ்டுகள் முன்னணியில நிற்கவில்லை— குறுககே படுத்தார்கள். வேலை நிறுத்தத் தேதி நெருங்கியதும் தங்களையும் மிதித்து தொழிலாளிவர்க்கப் போரணி பீடுநடை போடுமென்று கண்ட வலது கம்யூனிஸ்டுகள் மிதிபடுவதிலிருந்து தப்ப எழுந்து நின்று ஓரத்தில் ஒதுங்கினார்கள் என்பதுதான் உண்மை. கடைசி நேரத்தில் வேலை நிறுத்தத்தை ஆதரித்து அவர்கள் நிறைவேற்றிய தீர்மானத்தின் மர்மம் இதுதான்.

எதார்த்த நிலையை கண் கூடாகப் பார்த்த பிறகாவது சீர்குலைவுபாதையை கைவிட்டுப் போராடும் வர்க்க ஒற்றுமைப் பாதையை வலதுசாரி கம்யூனிஸ்டுகள் கடைப்பிடிக்க முன்வர வேண்டுமென்று விரும்புகிறோம். முன்னணியில் நிற்க கூச்சமிருந்தாலும் அணியிலாவது நில்லுங்கள்.

வெற்றுவாய்ப் பந்தல் எடுக்காது.

—நந்தன்

---

## இந்திய சுதந்திரப் போராட்ட வரலாறு

அத்தியாயம்-7

[தொடர்ச்சி]

# 1857க்கு முன்பு தென்னிந்தியாவில்....

**இ.எம்.எஸ்.நம்பூதிரிபாட்**

இந்தப் போராட்டங்களின் வளர்ச்சிக்கும் வெகுஜன ஆதரவுக்கும் காரணமாக இருந்த அதே சூழ்நிலைதான் இந்தப் போராட்டங்களின் இறுதித் தோல்விக்கும் காரணமாக இருந்தது. டாக்டர் ராஜய்யன் வெளிப்படுத்திய வரலாற்று உண்மைகளை மேலெழுந்தவாரியாகப் பாராமல் சரித்திரவியல் பொருள் முதல் வாதக் கண்ணோட்டத்தில் இதனைப் பார்க்கும் எவருக்கும் இந்த உண்மை புலனாகும். அடுத்த அத்தியாயத்தில் நாம் விளக்கவிருக்கும், வட இந்தியாவில் நடந்த சுதந்திரப் போராட்டத்திற்கும், தென்னிந்தியாவில் நடந்த இந்த சுதந்திரப் போராட்டங்களுக்குமுள்ள வேறுபாட்டைப் புரிந்து கொள்வதற்கும் மேற்கூறிய அரசியல் சூழ்நிலை உதவிகரமாக இருக்கும்.

## தென்னிந்தியாவில் டெல்லிப் பேரரசின் நேரடி ஆதிக்கம் சிறிதும் இல்லை

வட இந்தியாவில் கோலோச்சி நின்ற மௌரியர்கள் முதல் மொகலாயச் சக்கரவர்த்திகள் வரை, எந்தப் பேரரசின் மேலாதிக்கத்திற்கும் உட்படாமல் முழுமையான சுதந்திர நாடுகளாகத்தான் தென்னிந்தியா இருந்தது. சில காலங்களில் வட இந்திய ஆதிக்கத்தின் கீழ் சில நாடுகள் வந்துவிட்டபோதிலும் வெகு சீக்கிரமாக பேரரசுக்கெதிராகப் போர்க்கொடி உயர்த்தி தென்னிந்திய நாடுகள் சுதந்திர நாடுகளாக ஆகிவிட்டன. போர்த்துக்கீசியர்கள் முதல் ஆங்கிலேயர்கள் வரையுள்ள அந்நியர்கள் இந்தியாவில் தங்களின் மேலாதிக்கத்தை நிலைநாட்ட முயற்சித்த காலத்தில், தென்னிந்தியாவில் டில்லிப் பேரரசர்களின் நேரடி அதிக்கம் பெயரளவில் கூட இல்லாமலாகிவிட்டது.

தென்னிந்தியாவில் பெரும்பாலும் எல்லா நாடுகளும் சுதந்திர நாடுகளாகத்தான் இருந்தது. மொகலாயப் பேரரசர்களுக்கெதிராக மராத்தியர்கள் நிரந்தரமாக போர்க்கொடி உயர்த்தி தங்களது பிரதேசங்களின் சுதந்திர ஆட்சியாளர்களாக இருந்தார்கள். இத்தோடு மட்டும் நில்லாமல், வடக்கிலுள்ள மொகலாயப் பேரரசின் நேரடி ஆட்சிக்குட்பட்ட பிரதேசங்களில் படையெடுப்பு நடத்தி, சில பிரதேசங்களை தங்களது நாட்டுடன் இணைக்கவும் செய்தார்கள்.

இதே போல் ஹைதராபாத் நிஜாம் பெயரளவில் மொகலாயப்பேரரசுக்குட்பட்டு ஆட்சி செலுத்திய போதிலும் பிற்காலத்தில் சுதந்திர நாடாகப் பிரகடனம் செய்தார். மைசூரில் ஆட்சி செலுத்திய நவாப் பெயரளவில் கூட டில்லிப் பேரரசின் மேலாதிக்கத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. மைசூரைப் போன்று சுதந்திரமாக இருந்த இன்னும் பலநாடுகள் உண்டு. உதாரணமாக ஆற்காடு, தஞ்சாவூர், மதுரை, ராமனாதபுரம், முதலிய தமிழ்நாடு அரசர்களும், 'ஆயிரம் வருடங்களுக்கு மேலாக அரசியல் சுதந்திரத்தைப் பேணிப் பாதுகாத்தவர்கள்' என்று டாக்டர் ராஜய்யன் புகழ்ந்துள்ள மலபாரிலுள்ள அரசர்களும்; மலபாரிலுள்ள சில சிறு நாடுகள் காலப்போக்கில் விரிவடைந்து பெரியதான கொச்சி, திருவிதாங்கூர் முதலிய நாடுகளும் அன்று சுதந்திர நாடுகளாகத்தான் இருந்தன.

விந்திய மலைத் தொடர்களுக்கு தெற்கே இருக்கும் இந்த பிரதேசங்களில் ஆட்சி செலுத்திய அரசர்கள் தங்களுக்குள் ஓயாமல் போரிட்டுக் கொண்டே இருந்தார்கள். இவர்களில் ஒவ்வொருவரும் மற்றவர்களை கீழ்படிய செய்து தங்களது மேலாதிக்கத்தை நிலைநாட்டுவதற்காகவும், அதன் மூலம் தங்களது நாட்டை விரிவுபடுத்தி ஒரு "பேரரசர்" என்றபட்டத்தை அடைவதற்காகவும் முயற்சித்துக்கொண்டே இருந்தார்கள். தங்களின் இந்த லட்சியத்தை அடைவதற்கு பயன்படுகின்ற அளவில் யாருடனும் கூட்டுச்சேருவதற்கும் அவர்களுக்கு எவ்வித தயக்கமும் ஏற்படவில்லை.

இந்த கூட்டுறவு சேருவதின் ஒரு பகுதி என்ற வகையில்தான் ஆரம்பத்தில் போர்த்துக்கீசியர்களுடனும் பிறகு ஏனைய ஐரோப்பிய கம்பெனிகளுடனும் வசதிக்கேற்றாற் போல் நேசிக்கவும் பகைக்கவும் இவர்கள் தயாரானார்கள்.

## போளிகர்கள் அல்லது நிலப்பிரபுக்களின் பாத்திரம்

மன்னர்கள் தங்களுக்கிடையே போரிட்டுக் கொண்டிருந்ததோடு மட்டுமல்லாமல், தங்களது ஏவலாளர்களாக இருந்த நிலப்பிரபுக்களுக்கு எதிராகவும் போராடவேண்டிய நிலை அன்று ஏற்பட்டிருந்தது, ஏனெனில் அன்றைய தென்னிந்திய ஆட்சி அமைப்பின் பிரிக்க முடியாத ஒரு பகுதி என்ற முறையில், மன்னர்களுக்குக் கீழ் ஏராளமான நிலப்பிரபுக்கள் இருந்துவந்தார்கள் இந்த நிலப்பிரபுக்களுக்கு தமிழ் நாட்டிலும் கர்நாடகத்திலும் அன்று போளிகர்கள் என்ற பெயர்தான் வழங்கப்பட்டு வந்தது. கேரளத்தில் இந்தப் பெயர் வழக்கில் இல்லை.

இந்த நிலப்பிரபுக்கள் அன்றைய ஆட்சியமைப்பில் வகித்த பிரதான பாத்திரத்தை பற்றி டாக்டர் ராஜய்யன் கீழ்வருமாறு கூறுகிறார்.

"அன்றைய ஆட்சியமைப்பில் இந்த நிலப்பிரபுக்கள், மன்னர்களுக்கும் மக்களுக்கும் இடையே ஒரு பிரதான இடத்தை வகித்தார்கள். இவர்கள் ராஜாக்கள் எனவும், ஜமீன்தார்கள் எனவும் அழைக்கப்பட்டார்கள். அவர்கள் தங்களது நிலத்திற்கு வரி செலுத்தி வந்ததோடு தேவைப்படும் போது மன்னர்களுக்கு படைகளை அனுப்பி உதவவும் செய்தார்கள்; கொள்ளைக்காரர்களிடமிருந்து குடிமக்களையும் அவர்களின் சொத்துக்களையும் பாதுகாத்து வந்தார்கள். சில வேளைகளில் அவ்வாறு பாதுகாப்பு அளிப்பதில் தாங்கள் தவறிவிட்டால் சொத்து நஷ்டமடைந்த மக்களுக்கு நஷ்டஈடு வழங்கினார்கள்; போலீஸ் அதிகாரம், நீதி—நியாயங்களை நடத்துவது, கோயில்களைப் பாதுகாப்பது, விவசாயத்தை ஊக்குவிப்பது, மக்களின் பாதுகாப்புக்கான நடவடிக்கைகளை எடுப்பது-ஆகிய இதுபோன்ற பொது மக்களின் அன்றாட பிரச்சினைகள் எல்லாவற்றையும் இந்த நிலப்பிரபுக்கள்தான் கவனித்துவந்தார்கள்.

"மன்னர்களுக்கும் மக்களுக்குமிடையே நிற்கின்ற அதிகாரிகள் என்ற நிலையில் மன்னர்கள் செய்யத்தவறிய எல்லா நடவடிக்கைகளையும் மக்கள் நன்மைக்காக அவர்கள் மேற்கொண்டார்கள்.

"அரண்மனையில் கொலுவீற்றிருக்கும் மன்னர்களைச் சந்திக்க இயலாத சாதாரண மக்களுக்கு, இந்த ஜமீன்தார்களின் ஆட்சியதிகாரத்தை மிக எளிதாகப் பயன்படுத்த முடிந்தது. இவ்வாறு இந்த நிலப்பிரபுக்களுக்கும் வெகு ஜனங்களுக்கும் இடையே அன்பு கலந்த நெருக்கமான ஓர் உறவு ஏற்பட்டிருந்தது."

## மன்னர்களின் அச்சம்

ஜமீன்தார்களுக்கும் மக்களுக்கும் இடையே இருந்த இந்த நட்புறவை, அக்கால மன்னர்கள் மிக அபாயமாக எண்ணினார்கள். பிற மன்னர்களின் படைகளைப் போன்றே, தம் சொந்த நாட்டில் உள்ள மக்களுக்கும் ஜமீன்தார்களுக்குக்கும் இடையே உள்ள நட்புறவு தமக்கு அபாயம் விளைவிக்கும் என அக்கால மன்னர்கள் ஒவ்வொருவரும் பயந்து கொண்டிருந்தார்கள். ஏனெனில், இந்த ஜமீன்தார்களின் செல்வாக்கு மக்கள் மத்தியில் பெருகியிருக்கும் காலம்வரை, எந்தவொரு மன்னனுக்கும் தனது மேலாதிக்கத்தை நிலைநாட்ட முடியாது. பயங்கரமான பெரும் போர்களை நடத்தி தங்களது எதிரி மன்னர்களை தோற்கடித்து, அவர்களின் நாட்டைப் பிடித்துக்கொண்டால் கூட, இந்த ஜமீன்தார்களின் செல்வாக்கு — மக்கள் மத்தியில் நீடிக்கும் காலம் வரை - தங்களின் ஆதிக்கத்திற்கு எவ்விதஉறுதியும் இல்லையென மன்னர்கள் கருதினர்.

இவ்வாறு, அன்றைய மன்னர்களுக்கு இரண்டு வகையான தலைவலி இருந்தது. ஒருபுறம் தமது நாட்டில் தமக்குக்கீழிருந்த ஜமீன்தார்களுக்கெதிராகவும், மறுபுறம் பிறமன்னர்களுக்கெதிராகவும் பல்வேறு மோதல்களும் போர்களும் நடத்த வேண்டிய நிலை ஏற்பட்டிருந்தது. இந்த இரண்டு பிரிவினருக்கும் எதிரான போராட்டத்தில் தங்களுக்கு "உதவி செய்பவர்கள்" என்ற வகையில்தான் அந்நிய வியாபாரிகளை இந்த மன்னர்கள் இருகரங்களும் நீட்டி வரவேற்றார்கள்.

## சுதேசி மன்னர்களின் நிலை

இந்த இருமுனைப் போராட்டங்களில், தங்களின் வெற்றிக்காக இந்த மன்னர்கள் தங்களது நேச சக்திகளான ஏனைய மன்னர்களின் உதவியை ஓரளவு வரை நிச்சயம் நாடியிருக்கலாம்—[அதாவது நேச நாட்டு மன்னர்களையும் அவர்களின் படைகளையும்]. காரணம் என்னவெனில், சுதேசிமன்னர்களை விட பயனுள்ள உதவியை அளிக்க அந்நிய கம்பெனிகளுக்கு முடிந்தது. அதற்கு இரண்டு பிரதான காரணங்கள் இருந்தன முதலாவது—அந்நிய வர்த்தகக் கம்பெனிகளிடம் மிகப் பயனுள்ள நவீன ஆயுதங்களும் அதற்கேற்ற யுத்த முறைகளும் இருந்தன இரண்டாவது அந்நியக் கம்பெனியினரிடம பெரிய கப்பல் படைகள் இருந்தன இதனால், பெருமளவில் கப்பல் படையுள்ள அந்நியக்கம்பெனியினர், தங்களின் நேசசக்திகளுக்கு உதவிபுரியவும் பகைவர்களுக்கு கேடு விளைவிக்கவும் செய்தார்கள்.

தங்கள் நண்பர்களுக்குப் பயன்படும் வகையில் தேவையான சரக்குகளை வேகமாக அனுப்பிவைக்கவும், பகைவர்களின் போக்குவரத்தை முடக்கி இடைஞ்சல் செய்யவும் அவர்களால் முடிந்தது. இதன் காரணமாக, ஒன்றன்பின் ஒன்றாக இந்தியாவிற்குள் நுழைந்த அந்நியக் கம்பெனியினரில் ஏதாவது ஒரு கம்பெனியை நட்புறவுக்காக நாடுவது என்பது அக்கால மன்னர்களின் நடைமுறை கொள்கையின் ஒருபகுதியாக மாறிவிட்டது.

தங்களது மேலாதிக்கத்தை விரிவுபடுத்துவதற்காக, பல்வேறு மன்னர்கள் பல்வேறு அந்நிய கம்பெனியினரை நாடுகின்ற இந்த நிலை, 16-ஆம் நூற்றாண்டோடு வட இந்தியாவிலும், தென்னிந்தியாவிலும் ஒரே மாதிரியாக உருவாயிற்று. ஆனால் வட இந்தியாவின் நிலைமையோடு ஒப்பிடுகையில் தென்னிந்தியாவில் இன்னொரு சிறப்பான அம்சமும் இருந்தது. ஆரம்பத்தில் சுட்டிக் காட்டியது போன்று இங்கு பெயரளவில் கூட ஒரு பேரரசர் கிடையாது; ஒவ்வொரு மன்னரும் சுதந்திரமாக இருந்தார், எனவே, பல்வேறு மன்னர்களுக்கிடையே நடக்கும் போராட்டங்கள் முடிவடைவதுதான் அவர்கள் ஒவ்வொருவருடைய இராணுவ பலத்தை மட்டுமே பொறுத்து இருந்தது.

இதோடு மட்டுமின்றி, வட இந்தியாவை விட தென்னிந்தியா மிகவும் நெருக்கமாக கடலை ஒட்டியிருக்கும் பிரதேசமாகும். எனவே, கடல்படை, நவீன இராணுவ பலம் ஆகியவற்றை பின்பலமாகக் கொண்டுள்ள அந்நியக் கம்பெனியினருக்கு, வட இந்தியாவைவிட மிக விரைவாகவும் திறமையாகவும் தென்னிந்திய அரசியல் உறவுகளில் செல்வாக்குச் செலுத்த வேண்டும்,

இப்படிப்பட்ட சூழ்நிலைகளின் விளைவாக 18-ம் நூற்றாண்டின் இறுதியிலேயே தென்னிந்தியா முழுவதும் ஆங்கிலேயரின் கைவசம் வந்து விட்டது. தென்னிந்திய மன்னர்கள் ஒவ்வொருவரும் பல்வேறு சந்தர்ப்பங்களில் வெவ்வேறு முறையில் ஆங்கிலேயர்களுக்கு கீழ்ப்படிந்தார்கள்.

திருவிதாங்கூர், புதுக்கோட்டை, தஞ்சாவூர், ஆற்காடு, மைசூர், புனா, ஹைதராபாத்—ஆகிய சமஸ்தானங்களிலுள்ள மன்னர்கள் ஆங்கிலேயர்களுக்கு— கீழ் பணிந்து ஆட்சி செலுத்தினார்கள். அல்லது இவர்களின் நாடுகள் ஆங்கிலேயரின் கைவசப் பிரதேசமாக மாறியது. நூற்றைம்பது ஆண்டு காலமாக நிலைநின்ற ஓர் ஆட்சியமைப்பு (பிரிட்டிஷ்காரர்களின் ஆட்சியும், சில சுதேசி மன்னர்களின் ஆட்சியும் என இருந்த ஒரு அமைப்பு) 18 ஆம் நூற்றாண்டின் ஆரம்ப வருடங்களிலேயே தென்னிந்தியாவில் உருவாயிற்று.

## மருதுபாண்டியன்

இந்த ஆட்சி அமைப்புகளை எதிர்த்து, முன்பு மன்னர்களின் கீழிருந்து அதிகாரம் செலுத்திய நிலப்பிரபுக்கள் நடத்திய கலகத்தைப் பற்றித்தான் டாக்டர் ராஜய்யன் தன்னுடைய நூலில் விளக்கமாகக் குறிப்பிடுகிறார். ஆனால் மேலே குறிப்பிட்டது போன்று, சாதாரண மக்கள் மீது நெருக்கமான நட்புறவு கொண்டிருந்தவர்கள்தான் இந்த ஜமீன்தார்கள். அதனால்தான் இவர்கள் நடத்திய ஆங்கிலேய எதிர்ப்புக் கலகங்களுக்கு மிகுதியான வெகுஜன ஆதரவும் பின்பலமும் இருந்தன. ஒவ்வொரு ஜமீன்தார்களாலும் ஆயிரக்கணக்கான போர் வீரர்களை சுலபமாகத் திரட்ட முடிந்தது. பல்வேறுபிரதேசங்களிலுள்ள ஜமீன்தார்கள் கூட்டாகச் சேர்ந்து ஒரு கூட்டான எதிர்ப்பு அணி உருவாக்கி தங்களின் பலத்தை ஒருமுகப்படுத்தினால் அது ஒரு பெரிய இராணுவமாகவே ஆகிவிடும்

இவ்வாறு, பல்வேறு பிரதேசங்களிலுள்ள ஜமீன்தார்களின் கீழ் உருவான படைகளின் நடவடிக்கைகளை ஒழுங்கு படுத்தவும், மையப்படுத்தவும் அன்று சில கலகத் தலைவர்கள் முயற்சி எடுத்தார்கள். தென் முனையிலுள்ள திருநெல்வேலியில் கட்டப்பொம்மன் முதல் வட கர்நாடகமும் தென் மகாராஷ்டிரமும் உட்பட்ட பகுதியில துந்தாஜி வாகு வரை, ஏராளமான கலகக்காரர்களின் ஒரு ஸ்தாபனமும் ஏற்பட்டது.

இவர்கள் ஒவ்வொருவருடைய தனிச் சிறப்புகள், அவர்களின் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்துவதற்காக கையாண்ட வழி முறைகள், இவைகளின் மூலம் உருவான ஒன்றுபட்ட போர்த்திட்டம் முதலியவற்றைப் பற்றி டாக்டர் ராஜய்யன் விளக்கமாக ஆய்வு செய்துள்ளார். 1857-59-ல் வட இந்தியக் கலகத்தை ஒடுக்கியது போன்றே, நீண்டகால யுத்தங்கள் நடத்தியதன் மூலம் மட்டும்தான் இந்த தென்னிந்திய கலகங்களையும் ஆங்கிலேயர்களால் அடக்க முடிந்தது.

அன்று இது போன்ற ஒன்றுபட்ட போர்த்தந்திரங்களை உருவாக்குவதற்கு மூலகாரணமாயிருந்தவர் சிவகங்கையில் ஜமீன்தார்களாக (குறுநில மன்னர்கள் என்றும் வழங்கப்பட்டது) இருந்த மருது பாண்டியன்தான் என டாக்டர் ராஜய்யன் சித்தரிக்கிறார். திருநெல்வேலி பிரதேசத்திலுள்ள கட்டபொம்மன் உட்பட மதுரைக்குத் தெற்கேயுள்ள எல்லா நிலப்பிரபுக்களையும் அவர்களின் பிரதேசங்களிலுள்ள வெகு ஜனங்களையும் அணி திரட்டுவதில் இவர் பிரதான பங்கு வகித்தார். இதோடு நிற்காமல், வடக்கே 'திண்டுக்கல, கோயம்புத்தூர், மலபார், மைசூர், மகாராஷ்டிரம் முதலிய பிரதேசங்களிலுள்ள ஆங்கிலேய எதிர்ப்புக் கலகக்காரர்களையும் இணைந்து ஒன்றுபடுத்தி அவர்களின் எல்லா படைகளையும் ஆங்கிலேயர்களின் கோட்டைகளுக்கு எதிரான தாக்குதல்களுக்குப் பயன்படுத்தவேண்டுமென்ற போர்த் திட்டமும் அவரிடம் இருந்தது,

இந்தப் போர்த்திட்டம் ஓர் எல்லைவரை பெருமளவில் வெற்றிபெறவும செய்தது.

1857—59 ல் நடந்த வட இந்தியக் கலகத்தைப் போன்றே, 1800-1801 ல் நடந்த தென்னிந்தியக் கலகத்தை ஒடுக்க ஆங்கிலேயர்கள் மிகுந்த பிரயத்தனம் எடுக்க வேண்டியதாயிற்று. இதுபற்றி ஆங்கிலேயத் தளபதிகளும் ஆட்சித் தலைவர்களும் குறிப்பிட்டுள்ள கருத்துக்களில் சிலவற்றை டாக்டர் ராஜய்யன் தனது நூலில் சுட்டிக்காட்டுகிறார். இது, தென்னிந்தியக் கலகக்காரர்களிடம் மிகுதியான மதிப்பையும் மரியாதையையும் ஏற்படுத்துவதற்கு பயன்படுகின்ற ஒரு கதையாகும்.

ஆனால் 1857—59ல் நடந்த வட இந்தியக் கலகம் உள்பட இந்தியாவின் பல பகுதிகளில் நடந்த கலகங்களைப் போன்றே, தென்னிந்தியக் கலகங்களும் அடக்கி ஒடுக்கப்பட்டன. இவற்றில் பங்கெடுத்த நூற்றுக்கணக்கான வீர தேச பக்தர்கள் மரண தண்டனைக்குள்ளானார்கள். பன்மடங்கு மக்கள் தங்கள் உடமைகளை இழந்து நாதியற்றவர்களானார்கள். ஏராளமான மக்கள் நாடுகடத்தப்பட்டனர். இவர்கள் எல்லோருடைய வாழ்க்கை இலட்சியமான தேசிய சுதந்திரம் ஒரு கடந்த கால வெறும் ஞாபகார்த்தமாகவும் எதிர்காலக் கனவாகவும் மாறியது. நாட்டுமக்கள் ஆங்கிலேய ஆட்சியின்காலடியில் கிடந்து நரக வேதனை அனுபவிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது.

## முட்டாள்தனம் மட்டுமா?

இந்த நிலை ஏன் ஏற்பட்டது? இந்தக் கேள்விக்கு, போராட்டத் தலைவர்களில் பிரசித்திபெற்ற மருதுபாண்டியன் எளிதான ஒருபதிலைக் கூறுகிறார்:

"இந்த நாட்டுமன்னர்கள் ஐரோப்பியர்களை முழுமையாக நம்பியதன் காரணமாக பெரிய முட்டாள்த்தனத்தை செய்து விட்டார்கள். அது மட்டுமின்றி, மக்களுக்கிடையே ஒற்றுமையோ நட்புணர்வோ இல்லை; அவர்களுக்கு ஐரோப்பியர்களின் வஞ்சகத்தை உணர முடியவில்லை" (1801-ல் மருதுபாண்டியன் வெளியிட்ட திருச்சிராப்பள்ளி பிரகடனம் அல்லது அறிக்கை)

டாக்டர் ராஜய்யன் மருதுபாண்டியனின் இந்தக் கருத்தோடு ஒன்றுபடுகிறார் என்று தோன்றுகிறது. ஆனால் இது ஒரு திருப்திகரமான பதில் அல்ல. ஏனெனில், மன்னர்களின் முட்டாள்த்தனத்திற்கும் மக்களின் ஒற்றுமையின்மைக்கும் மூலகாரணம் என்ன வென்ற கேள்விக்கு மருதுபாண்டியனின் விளம்பரம பதில் கூறவில்லை. பல நூற்றாண்டுகளாக நீடித்திருந்த ஓர் அமைப்புக்குஇப்பொழுது மட்டும் இப்படிப்பட்ட ஒரு நிலைமைஏற்படுவதற்குக்காரணம் என்னவென்ற கேள்விக்குபதில்கூற டாக்டர்ராஜய்யனால கூட இயலவில்லை.

இந்தக் கேள்வியின் உண்மையான பதிலை ஏற்கெனவே முன் அத்தியாயங்களில் சுட்டிக் காட்டியுள்ளேன்: பழைய காலங் கடந்த ஒரு கிராமிய சமூக அமைப்புக்கும், புதிதாக உருவான நவீன சமூக அமைப்புக்கும் இடையே தான் இங்கு மோதல் நடைபெறுகிறது. இதில் ஒரு பிரிவினருக்கு நவீன சமுதாயத்தைக் கட்டியமைக்க வேண்டுமென்ற துடிப்பு இருக்கிறது மற்றொரு பிரிவினருக்கு தங்கள நாட்டையும் அதன்ஊறிபோனபுராதீன பாரம்பரியங்களையும் கட்டிக்காக்க வேண்டுமென்ற துடிப்பு இருக்கிறது இவை இரண்டுக்குமிடையேதான் அன்று பிரதான மோதல் நடந்தது. இந்நிலைமையில் நம்நாட்டை எவ்வாறு காப்பாற்றுவது? அந்நியர்கள் மூலம் இங்கு நுழைந்து வருகின்ற நவீன சமுதாய அமைப்பின் நல்ல அம்சங்களை நாம ஏற்று, அதைப்பயன்படுத்தி நம் சமூகத்தை நவீனப்படுத்துவதன் மூலம் மட்டும்தான் நமது நாட்டை அந்நிய ஆக்கிரமிப்பிலிருந்து காப்பாற்ற முடியும். சுதந்திரப் போராட்டத்தின் மூல கர்த்தாக்களும், இப்பக்கத் தலைவர்களும், இதைக் கையாளத் தவறினார்கள். மருது பாண்டியன் திருச்சிராப்பள்ளிபிரகடனத்தில் கூறியது போன்று

"ஆற்காடு நவாபுக்கு அவருடைய நாட்டின் மீதும் விஜயராமநாத திருமலைநாயக்கருக்கு தஞ்சாவூர் மீதும், ஏனைய மன்னர்களுக்கு அவரவர்களின் நாடுகளின் மீதும் உள்ள பரம்பரை பரம்பரையான மேலாதிக்கத்தை, அவர்களின் நம்பிக்கைகளுக்கும் தேசியச் சட்டங்களுக்கும் உகந்த முறையில் மீண்டும் நிலைநாட்டுவதற்கு முயற்சி செய்தார்கள்."

அரை நூற்றாண்டுக்கு மேற்பட்ட காலத்திற்குப் பிறகு வட இந்தியாவில் நடந்த போராட்டத்தின் தலைவர்களும் இந்த இலட்சியத்தை முன்வைத்துத்தான் போராடினார்கள். அதுதான் அந்தப் போராட்டங்களின் பலகீனம் என்பதையும் அடுத்துவரும் அத்தியாயங்களில் நாம பார்க்கலாம்.

[7-வது அத்தியாயம் முடிந்தது.]



மொசாம்பிக் நாட்டு முதல் ஜனாதிபதி சமோரா மைக்கேல்.

# விடுதலை பெற்ற நாடுகளின் வெற்றி முழக்கம்

அங்கோலா மக்கள் குடியரசுத் தலைவர் டாக்டர் அகஸ்டினோ நெட்டோ.

சமீபத்தில் விடுதலை பெற்ற நாடுகளில் சுரினாமும் ஒன்று. டச்சு ஏகாதிபத்தியத்தின் ஆட்சியின் கீழ் இருந்தது. அதே போல் பிரெஞ்சு ஆட்சியின் கீழ் இருந்த கொமரோ தீவுகளும் விடுதலை பெற்றுள்ளன.

சுரினாம் தென் அமெரிக்காவின் வடக்குப்பகுதியிலுள்ள நாடு. இங்கு நீக்ரோக்களும் இந்தியர்களும் அதிகமாக உள்ளனர், ஒரு காலத்தில் இந்தியாவிலிருந்து பிழைப்பதற்காகச் சென்றவர்கள் இவர்கள் சுரினாம் ஏ ற இந்த டச்சுக் காலனியிலும், மேற்கிந்திய தீவுகளிலும் வசிக்கிறார்கள். இதே சுரினாமுக்கு அருகில் தான் பிரிட்டிஷ் கயானா என்ற நாடும் இருக்கிறது. பிரிட்டிஷ் காமன்வெல்த் கூட்டுறவின் கீழ் ஒரு குடியேற்ற நாடாக இன்றும் திகழுகிறது. அங்கும் இந்திய வம்சாவழியினர் கணிசமாக உள்ளனர்,

சுரினாமுக்கு சுதந்திரம் வழங்கிய பிறகு அங்குள்ள இந்தியர்களில் வசதி படைத்தோர் ஹாலந்துக்கு திரும்பிவருவதாக செய்திகள் வந்துள்ளன. காரணம், சுரினாமிலுள்ள மெஜாரிட்டி மக்களான நீக்ரோக்களிடையே செல்வாக்கு வாய்ந்தவர்கள் இடதுசாரி தீவிரவாதிகளென்றும் அவர்கள் தமது சொத்துக்களை அபகரித்துக் கொள்ளக்கூடும் என்றும் பயந்து வெளியேறுகிறார்களாம்.

டச்சு சாம்ராஜ்யத்தின் பிரஜைகள் அனைவரும் (டச்சு) ஹாலந்தின் பிரஜைகள் என்ற சட்டம் இதுவரை இருந்தது. சுரினாம் சுதந்திரம் அடைந்து விட்டதால் இதுவரை அங்கு சேர்த்ததை எடுத்துக் கொண்டு மேற்கூறிய சட்டத்தைப் பயன்படுத்திக் கொண்டு ஹாலந்துக்கே திரும்பி வருகிறார்களாம். அவர்களில் பலர் ஹாலந்தில் வேலை தேடி அலைய வேண்டிய நிலையும் ஏற்பட்டு உள்ளது.

## இந்தியர் ஜனாதிபதி

வசதி படைத்தோரின் பீதி ஒருபுறமிருக்க, சுதந்திர சுரினாம் மக்கள் ஜெர்நாத் லட்சுமணன் என்ற ஒரு இந்தியரையே புதிய சுரினாம் குடியரசின் தலைவராக ஆக்க போகிறார்கள்.

சுரினாம் சுதந்திரமடைந்து ஐ. நா. வில் உறுப்பினராக போவதைப்போலவே பிரெஞ்சு ஆதிக்கத்தின் கீழிருந்து ஆப்ரிக்க கண்டத்தின் தென்கிழக்கு கடற்பகுதியில் அதாவது, இந்துமகா சமுத்திரத்திலுள்ள கொமோரோ என்ற தீவுகளுக்கும் சமீபத்தில் விடுதலை கிடைத்தது.

இவர்கள் தங்களைத் தாங்களே சுதந்திரவாசிகள் என்று பிரகடனப்படுத்திக் கொண்டனர். பிரெஞ்சுக்காரர்களால் இந்த சுதந்திரப் பிரகடனத்தைத் தடுக்க முடியவில்லை. அங்கீகரிக்கும்படியும் இன்று நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளார்கள்.

கொமோரோ தீவுகளில் ஒரேயொரு தீவிலுள்ளவர்கள் மட்டும் நாங்கள் சுதந்திர சர்க்காருடன் இணைய மாட்டோம், பிரெஞ்சு ஆட்சியுடன்தான் இருப்போம் என்று கூறுகிறார்களாம். இதற்குபிரெஞ்சு ஆட்சி மறைமுகமாக ஒத்துழைப்பும் தருகிறது. ஆனால் ஏனைய கொமோரோ தீவுகளிலுள்ள மக்கள் இதை முறியடிக்க பெரும் திரளாக அந்த தீவில் சென்று இறங்கி பிரெஞ்சு ஆட்சியின் சதிகளை முறியடிக்க தயாராகிக் கொண்டிருக்கிறார்கள்.

முன்பெல்லாம் இந்த சின்னஞ்சிறு நாடுகள் ஐ. நா. வில் சேருவதென்றால் அமெரிக்க, பிரிட்டிஷ், பிரெஞ்சு ஏகாதிபத்தியங்களின் தயவு இருந்தால்தான் முடியும்.

ஒரு காலத்தில் 40 நாடுகளை மட்டும் உறுப்பினராகக் கொண்டிருந்த ஐ நா இன்று பெரும் மாறுதல்களுக்கு ஆளாகி உள்ளது. இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பிறகு விடுதலை பெற்ற சுமார் நூறு நாடுகள் இன்று ஐ நா வில் உறுப்பினர்களாக சேர்ந்துள்ளன. இதன் பிறகு ஐ நா சபையின் தன்மையே மாறி விட்டது.

சுதந்திரமடைந்த நாடுகளுக்கு நம்பிக்கையான ஆதரவாளர்களாக பலம் வாய்ந்த சோசலிச நாடுகள் பக்கபலமாக இருப்பதால் அவைகளின் அரசியல் பொருளாதார ராணுவ உதவிகள் தொடர்ந்து உறுதியாக கிடைப்பதால், இவை இன்று ஐ நாவில் தெம்புடனும், திராணியுடனும் செயல்படுகின்றன. ஏகாதிபத்தியத்தின் உருட்டல்களுக்கும் மிரட்டல்களுக்கும் அஞ்சி பின்வாங்குவதில்லை.

## போர்ச்சுகீசிய சாம்ராஜ்யம்

சமீப காலம் வரை மிகப்பெரும் சாம்ராஜ்யமாகத்திகழ்ந்த போர்ச்சுகீசிய ஏகாதிபத்தியம் தகர்ந்து தரைமட்டமானது அனைவருக்கும் தெரிந்ததே. போர்ச்சுக்கலைவிட 22 மடங்கு பரப்பளவு உள்ள பிரதேசங்களை ஆப்ரிக்காவிலும் ஆசியாவிலும் தன்னுடையகாலனி நாடுகளாக போர்ச்சுக்கல் வைத்திருந்தது.

போர்ச்சுக்கலின்பரப்பளவு 92 000 சதுர கிலோ மீட்டர்தான். அதனுடைய ஜனத்தொகையோ 87 லட்சம்தான். ஆனால் அது இதுவரை ஆட்டிப்படைத்து வந்த ஆப்ரிக்காவிலிருந்த சாம்ராஜ்யத்தின் பரப்பளவு மட்டும் 21 லட்சம் சதுர கிலோ மீட்டர். அந்த ஆப்ரிக்கக் காலனிகளின் ஜனத்தொகையோ 1 கோடியே 47 லட்சம். இந்தப்பெரும் சாம்ராஜ்யத்தின் அங்கமாகத் திகழ்ந்த கினிபிசோ ஆப்பிரிக்காவின் வடமேற்கு கடற்கரைப் பகுதியிலுள்ள ஒரு நாடு, கினிபிஸோ மக்கள் போர்ச்சுக்கல் ஆதிக்கத்தை எதிர்த்து பெய்ஜே என்ற அரசியல் கட்சியின் தலைமையில் போராடினர். சமீபத்தில் விடுதலை பெற்று ஐ நா வின் உறுப்பினராகவும் சேர்ந்து விட்டது. அதேபோல் அதற்கு நேர் மேற்கே கடற்கரைப்பகுதியில் தீவுகளாக உள்ள கேப்வெர்டே தீவுகளும் சுதந்திரம் அடைந்து ஐ நா வில் உறுப்பினராகி விட்டன. அடுத்து சாந்தோம் பிரின்ஸ்பி என்ற மத்தியஆப்பிரிக்க மேற்கு கடற்கரைக்குஅருகாமையிலுள்ள சின்னஞ்சிறு தீவுகளும் விடுதலை பெற்று ஐ. நா. உறுப்பினர்களாகியுள்ளன. மிகச்சிறிய தீவுகள் இவை. ஜனத்தொகையும் அப்படித்தான். இவை கூட ஏகாதிபத்திய நாடுகளை எதிர்த்துப்போராடி சுதந்திரமடைந்து ஐ நா வில் உறுப்பினராகச் சேர முடிகிறது. காலம் எவ்வளவு வேகமாக மாறிவிட்டது.

## அங்கோலாவில் சுதந்திர அரசு

போர்சுக்கீசிய ஏகாதிபத்தியத்தின் மிகப்பெரியகாலனிநாடுதான் அங்கோலா. இது ஆப்ரிக்காவின் தென்பகுதியில் மேற்குக் கடற்கரை ஓரத்திலுள்ள பெரியதொரு நாடு. இதன் பரப்பளவு 12லட்சம் சதுரகிலோ மீட்டர். இந்தியாவின் மூன்றில் ஒரு பகுதிக்கும் கொஞ்சம் அதிகம். ஆனால் ஜனத்தொகையோ 57 லட்சம் தான். இங்கு விடுதலை இயக்கம் ஒரேகட்சியின் தலைமையில் வளராமல் போர்ச்சுக்கீசிய ஏகாதிபத்தியவாதிகள் பார்த்துக் கொண்டார்கள். விடுதலை இயக்கத்தையே சாதுர்யமாகப் பிரித்துவிட்டார்கள். விடுதலைக்காகப் போராடி வந்த கட்சிகளில் மார்க்சியவாதிகளும் ஏனைய தேசியவாதிகளும் ஒன்றிணைந்து பங்கு கொள்ளும் எம் பி எல் ஏ என்ற கட்சிதான் முக்கியமான கட்சி. இதுவல்லாமல் எப்என்எல்ஏ என்ற ஒரு அரசியல் கட்சியும் 'யூனிட்டா' என்ற மற்றொரு அரசியல் கட்சியும் அங்கு உள்ளன.

எப் என் எல் ஏ என்ற அந்த கட்சிக்கு, வடக்கேயுள்ள ஜெய்ரே என்ற நாட்டின் தலைவனான மொபுடுவின் ஆதரவும் உதவியும் உண்டு. இந்த மொபுடு ஜெய்ரே[காங்கோ]வின் முதல்

**கே. முத்தையா**

தலைவனான லுமும்பாவைக் கொன்று விட்டு அமெரிக்காவின் உதவியுடன் பதவியில் அமர்ந்த ஆள். மோபுடு மூலமாக அங்கோலாவின் வடக்குப் பிராந்தியத்தில் செல்வாக்குள்ள இந்த எப் என் எல் ஏ கட்சியுடன் தொடர்பு கொண்டு அமெரிக்கா இன்று தன் சதிவேலைகளைச் செய்து வருகிறது.

இதே போல் அங்கோலாவின் தெற்குப் பகுதியில் சிறிதளவு செல்வாக்குள்ள 'யூனிட்டா' என்ற அரசியல் கட்சிக்கு தென் ஆப்ரிக்காவின் நிறவெறி ஆட்சியாளர்கள் பக்கபலமாக இருக்கிறார்கள். இவ்வாறு அமெரிக்காவும் தென்ஆப்ரிக்காவும் பிரான்சு, பிரிட்டன், ஜெர்மனி போன்ற நாடுகளுடன் சேர்ந்து கொண்டு எப் என் எல் ஏ யையும் யூனிட்டாவையும் ஆதரித்து உதவிசெய்வதற்கான காரணம்என்ன? அங்கோலாவின்வட மேற்கேயுள்ள காபிண்டா என்ற மாகாணத்தில் எண்ணை நிறையக் கிடைக்கிறது. பல உயர்ந்த உலோகங்கள்கிடைக்கின்றன. இவைகளை சுரண்டி கொள்ளையடிக்கும் மேற்கு ஐரோப்பியக் கம்பெனிகள் பல அங்கு செயல்படுகின்றன. அதே போல் தெற்கே மின்சார உற்பத்தி செய்ய பயன்படும் குயினே என்ற ஒரு ஆறும் அதில் அணைக்கட்டும் உண்டு. இதனை தென் ஆப்பிரிக்கா அபகரித்துக்கொள்ள முயற்சி செய்து வருகிறது. குறிப்பாக அங்கோலாவின் தெற்கேயுள்ள நமீபியா என்ற நாட்டை தென் ஆப்பிரிக்க நிறவெறியர்கள் தொடர்ந்து ஐ நா வின் கட்டளைகளையும் மீறி தம் ஆதிக்கத்தின் கீழ் வைத்திருக்க முயற்சி செய்கின்றனர். இதற்கு அங்கோலாவிலுள்ள மின்சார உற்பத்தி நடக்கும் பகுதிகளும் ஏனைய சாதனங்களும் தேவைப்படுகின்றன. ஆகவே, தென்னாப்பிரிக்கா தன்னுடைய துருப்புகளை அங்கோலாவின் தெற்குப் பகுதியில் இறக்கியுள்ளது.

இந்த நிலையில் போர்ச்சுக்கலில் ஏற்பட்ட அரசாங்க மாறுதலுக்குப்பின் அங்கோலாவை தொடர்ந்து தன் ஆதிக்கத்தின் கீழ் வைத்திருக்க முடியாது என்ற முடிவுக்கு போர்ச்சுக்கீசிய அரசு வந்தது. இவ்வாண்டு நவம்பர் திங்கள் 11ம் நாள் தானகவே அங்கோலாவிற்கு சுதந்திரம் வழங்குவதாக அறிவித்துவிட்டு எந்த அரசியல் கட்சியிடமும் அதிகாரத்தை ஒப்படைக்காமல் தலைநகரான லுவாண்டாவில் எஞ்சியிருந்த தனது துருப்புகளை வாபஸ் வாங்கிக்கொண்டு வெளியேறிவிட்டது.

தலைநகரான 'லுவாண்டாவும் அங்கோலாவின் பெரும்பாலான மத்திய பகுதியும் அந்தச் சமயத்தில் எம் பி எல் ஏ என்ற அரசியல் கட்சியின் பிடிப்பில் இருந்தன. இந்த கட்சிதான் இன்று லுவாண்டாவை தலைநகராகக் கொண்ட அங்கோலாவின் மக்கள் குடியரசை பிரகடனப் படுத்தியுள்ளது. இதன் தலைவரே **டாக்டர் அகஸ்டினோ நெட்டோ** என்பவர். இவரையும் இவருடைய அரசாங்கத்தையும் பல சோசலிச நாடுகளும் ஆப்பிரிக்காவின் பல சுதந்திர நாடுகளும் அங்கீகரித்துள்ளன. பொருளாதார, ராணுவ உதவிகள் அளித்துவருகின்றன.

இந்த சுதந்திர ஆட்சியை ஒழித்துக்கட்ட அமெரிக்காவின் உதவியுடன் வடக்கேயிருந்து எப் என் எல் ஏயின் படைகள் தாக்குதல் தொடுத்துள்ளன. ஒரு கோடியே 80லட்சம் டாலர் அளவு ராணுவ உதவி அளிப்பதாக அமெரிக்கா அறிவித்துள்ளது. அதே போல தெற்கே இருந்து தென்ஆப்பிரிக்க நிறவெறியர்களின் ஆதரவுடன் படையெடுத்துள்ள யூனிட்டாவின் படைகளையும் எதிர்த்து எம் பி எல் ஏயின் விடுதலைப் படைகள் கடுமையாகப் போராடி வருகின்றன.

இந்தப் போராட்டம் இன்னும் முடியவில்லை. சோவியத் யூனியனும், ஏனைய சோசலிச நாடுகளும் எம் பி எல் ஏ யின் சுதந்திர அரசாங்கத்திற்கு உதவி செய்வதை 'அங்கோலாவில் தலையிடுவதாகக்' கூறி அமெரிக்கா மிரட்டிப் பார்த்தது, மோபுடுவின் ஜெய்ரே பிரதேசத்தைப் பயன்படுத்திக்கொண்டு ஆயுதந்தாங்கிய வெளியார்கள் அங்கோலாவிற்குள் நுழைந்திருப்பதும் தெற்கே தென்னாப்பிரிக்க நிறவெறியர்கள் அங்கோலாவின் தென்பகுதியைப் பிடிக்க கூலிப்படைகளை அனுப்பியிருப்பதும் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளுக்குத் தலையீடாகப்படவில்லை. அது நியாயமான செயலாம். தெற்கு வியட்னாமில் நடந்த ஆக்கிரமிப்பை நியாயப்படுத்தியதைப் போலவே இதையும் நியாயப்படுத்த முயற்சி செய்கிறார்கள். எப் என் எல் ஏ யையும், ''யூனிட்டா''வையும் பயன்படுத்தி அவர்களை எம் பி எல் ஏ தலைமையிலுள்ள சுதந்திர அங்கோலா குடியரசுக்கு எதிராகத் திருப்பி உள்நாட்டுப் போருக்கு அமெரிக்கா தூபம்போட்டு வருகின்றது. அவ்விரு கட்சிகளும் நாட்டின் வடபகுதியில் ஒரு கூட்டரசை நிறுவியுள்ளதாக அறிவித்துள்ளனர்.

ஆனால் இந்த ஏகாதிபத்தியச் சதி பலிக்காது. அங்கோலா மக்களின் ஜனநாயக சக்திகளும் தேசபக்த சக்திகளும் பெரும்பான்மையாக ஒன்றுதிரண்டு பல வருடங்கள் போராடிப் பெற்ற சுதந்திரத்தை நிச்சயம் பாதுகாத்துக் கொள்வார்கள். வியட்நாம் மக்கள் நீண்ட நெடுங்காலம் போராடி அமெரிக்காவை முறியடித்தது போல் அங்கோலா மக்களும் வெற்றி காண்பார்கள் என்பது உறுதி.

## மொசாம்பிக் குடியரசு

அண்மையில் உருவான மற்றொரு சுதந்திர ஆப்பிரிக்க நாடு மொசாம்பிக், இது ஆப்பிரிக்காவின் கிழக்குக் கடற்கரையோரம் உள்ள நாடு. இதன் பரப்பளவு 7லட்சத்து 87 ஆயிரம்சதுர கிலோ மீட்டர். இந்தியாவின் பரப்பளவில் நாலில் ஒரு பகுதிக்கு கொஞ்சம்குறைவு ஜனத்தொகையோ 82 லட்சம். கிட்டத்தட்ட போர்ச்சுக்கலின் ஜனத்தொகை அளவு. இங்கு ஒரே யொரு அரசியல்கட்சி தான் தேசவிடுதலைப்போராட்ட கட்சியாக இருந்து செயல்பட்டது. அதன் பெயர் பிரெலிமோ சென்ற பத்தாண்டுகளாகஆயுதம் தாங்கிய போராட்டத்தை நடத்திவந்தது. அந்தக் கட்சியின் ஸ்தாபகத்தலைவர் டாக்டர் எட்வார்டுமெண்டலே என்பவர். அவரை போர்ச்சுகீசிய ஏகாதிபத்திய வாதிகள் நயவஞ்சகமாக கொலை செய்தார்கள். அந்தகொலைக்குப்பின்பிரலிமோ கட்சி அழிந்து விடும் என்று எதிர்பார்த்தார்கள். ஆனால் அந்த கட்சியின் தலைவராக சமோரா மைக்கேல் என்பவர் தேர்ந்தெடுக்கப்பட்டு விடுதலைப்போராட்டம் முன்னைவிட மேலும் தீவிரமாக நடந்தது. அந்தப்போராட்டத்தின் இறுதி வெற்றியே 1975 ஜுன் 25ல் புதிய போர்ச்சுக்கீசிய ஆட்சி மொசாம்பிக்கின் சுதந்திரத்தை அங்கீகரித்து பிரெலிமோ கட்சியிடம் அதிகாரத்தை ஒப்படைத்துவிட்டு வெளியேறிய நிகழ்ச்சி, மொசாம்பிக் மக்களின் விடுதலை வீரன் **சமோரா மைக்கேல்** தலைமையில் இன்று மக்கள் குடியரசை அமைத்துள்ளார்கள்.

"ஒரு புதிய நியாயமான சமுதாய அமைப்பை உருவாக்கிட— உலகை மாற்றியமைத்திட — உலகெங்குமுள்ள மக்களும் வர்க்கங்களும் நடத்திக் கொண்டிருக்கும் போராட்டத்தின் பிரிக்க முடியாத ஒரு பகுதியாகவே மொசாம்பிக் மக்கள் குடியரசு தன்னைக் கருதுகிறது. இந்த மகத்தான போராட்டத்தில் மொசாம்பிக் மக்கள் குடியரசு, சோசலிச நாடுகளையே தன்னுடைய இயற்கையான நண்பர்களாகக் கருதுகிறது. சுதந்திரமான வளர்ச்சியில் முன்னேறி ஒரு புதிய சமுதாயத்தை அமைப்போம் ஒவ்வொருவருக்கும் அவரது உழைப்புக்குத் தகுந்த ஊதியமும் சக்திக்குத்தக்க வேலையும் கிடைக்கத்தக்க வகையில் புதிய சமுதாயத்தை அமைப்பதே மொசாம்பிக் மக்கள் குடியரசின் நோக்கம். சகல மட்டத்திலும் ஜனநாயக ரீதியில் தேர்ந்தெடுக்கப்பட்ட உழைக்கும் மக்களின் பிரதிநிதிகளே அதிகாரம்செலுத்தும் ஆட்சியாகவிளங்கும்'' என்று சமோரா மைக்கேல் மொசாம்பிக்கின் ஜனாதிபதி பொறுப் பேற்றுதன்னுடைய முதல் பிரகடனத்தில் அறிவித்தார்.

இன்று சுதந்திர உலகத்தின் குரல்லட்சியத் தெளிவுடன் எவ்வளவு கம்பீரமாக ஒலிக்கிறது என்பதற்கு சமோரா மைக்கேலின் பிரகடனம் ஓர் உதாரணம்.

---

# நிலக்கடலை பருப்பு குவிண்டாலுக்கு ரூ. 300 விலை வியாபாரிகளின் மோசடியிலிருந்து பாதுகாப்பு

## கடலை விவசாயிகள் மாநிலமாநாடு கோரிக்கை

ஒட்டன்சத்திரம், நவ. 29—

ஒரு குவிண்டால் நிலக்கடலைப் பருப்புக்கு ரூ 300 என்று விலை நிர்ணயம் செய்ய வேண்டும் என்று இங்கு நடந்த தமிழக நிலக்கடலை சாகுபடி செய்யும் விவசாயிகளின் மாநில சிறப்பு மாநாடு வற்புறுத்தியது.

நவம்பர் 28, 29 தேதிகளில் நடந்த இந்த மாநாட்டுக்கு தமிழ்நாடு விவசாயிகள் சங்கத் தலைவர் தோழர் ஆர் ராமராஜ் தலைமை வகித்தார்.

இம்மாநாட்டில் நிலக்கடலை விவசாயிகளின் நிலைமை பற்றி விரிவாக பரிசீலனை செய்தபின் கீழ்வரும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தமிழ்நாட்டில் சுமார் 30லட்சம் ஏக்கர்களில் நிலக்கடலை சாகுபடி நடந்து வருகிறது. இதில் பல்லாயிரக்கணக்கான கிராமப்புற சிறு நிலக்காரர்களின் குடும்பமும் குறிப்பாக தென்னாற்காடு மாவட்டத்தில் குத்தகை விவசாயிகளும் கடலை விவசாயத்தில்ஈடுபட்டிருக்கிறார்கள். நிலக்கடலை உற்பத்தியில் நமது இந்திய நாட்டில் குஜராத்திற்கு அடுத்தபடியாக இரண்டாவது இடம் வகிப்பது தமிழ்நாடு ஆகும். நிலக்கடலை என்பது பிரதான பணப் பயிராகவும், சோப்பு—வனஸ்பதி ஆகியவைகளுக்கு மூலப்பொருளாகவும், கால்நடைத் தீவனத்திற்கு புண்ணாக்கு வழங்கும் பிரதான பொருளாகவும் நிலக்கடலை இருந்து வருகிறது.

இத்தகைய சிறப்பு வாய்ந்த நிலக்கடலைப் பயிர் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும்விவசாயிகளின் நிலையோ பரிதாபத்துக் குரியதாக— நாள்தோறும் கடும் பஞ்சத்தில் உழலக்கூடிய முறையில் உள்ளது. வாழ்நாள் முழுதும் கஷ்டப்படும் அவர்களது உழைப்பால் உற்பத்தி ஆகும் கடலை பூராவும் வர்த்தகச்சூதாடிகளின் இஷ்டத்திற்கு விடப்பட்டிருக்கிறது.

### பருவமழை-விதைக்கடலை

கடலை விவசாயத்தைத் துவங்க வேண்டுமானால் அதன் முக்கால் பகுதி நிலம் பருவமழையைநம்பித்தான் இருக்கிறது. இந்த பருவமழை ஜுலை மாதத்தில் பெய்தால்தான் உரியகாலத்தில் பயிர் செய்ய முடியும்: மழை பின்தங்கி விட்டால் விவசாய வேலை தொடங்கி விதைபோடுவதே பின்தங்கி விடுகிறது. அதனால்உற்பத்தி அளவு பெரும்பகுதி பாதிப்பிற்கு உள்ளாகிறது. கடலை விடும் நேரத்தில் மழைஅதிகமானாலும் கடலை சோடையாகி உற்பத்தி அளவு குறைந்து விடுகிறது. பருவமழை சரியான காலத்தில் பெய்து—கூடுதல், குறைவு இல்லாமலிருந்தால் தான் கடலை விவசாயம் சீராக இருக்கும்.

இவ்வாறு விவசாயம் செய்யும்நேரத்தில்விவசாயிகள் விதை பருப்பு வாங்க வேண்டும். தாங்கள்கடலையை விற்றதை விட 3 மடங்கு 4மடங்கு அதிகவிலை கொடுத்தே விதை வாங்க வேண்டும்.

### கடன் வசதி

அரசுடைமை யாக்கப்பட்டவங்கிகளோகூட்டுறவு வங்கிகளோகடலை விவசாயிகளுக்கு விவசாயச் செலவுக்கு என்று கடன் கொடுப்பதில்லை. அவர்கள் விவசாயம் செய்யக்கூடியகாலத்தில் தேவைப்படும் கடன்களை விதை வாங்குவதற்கு உட்படாதவர்கள் குடும்பங்களிலுள்ள தட்டு முட்டுச் சாமான்கள், சிறு தங்க நகைகள் பூராவையும் வட்டிக்கடைக்கு கொண்டுசெல்லவேண்டும். கந்து வட்டிக்காரர்களிடம் ரூ 100 பெற்றுக் கொண்டு 200-க்கு புரோநோட்டு எழுதிக் கொடுக்க வேண்டும். கடலைவியாபாரிகளிடம் கடலைக்கு முன்பணமாக கடன் வாங்க வேண்டும். இது அவர்கள் வாழ்விலுள்ள அவலநிலை,

### பூச்சி அபாயம்

அவர்கள் இத்தனை தொல்லைகளுக்கும்உட்பட்டு கடலை விவசாயம் செய்திருந்தால் கூடலைப் பயிரையே நாசப்படுத்தி அழித்துவிடும் கம்பளிப் பூச்சி — தொட்டாங்குச்சி நோய்—குருத்து புழு போன்ற நோய்கள். எனனமருந்து அடித்தாலும் பூச்சிகள் சாகாமல் கடலைப் பயிரையே நாசப்படுத்தி விடுகிறது.

இவ்வளவுக்கும் மீறி கடலைவிவசாயத்தில்கிடைப்பதை, 'விவசாயிகள் விற்க வேண்டுமானால்' தனிப்பட்ட வியாபாரிகளைத் தவிர இவர்களுக்கு எந்த ஏற்பாடு மில்லை.

கடலை வியாபாரிகள் கூடி முடிவு செய்து கொண்டுஒரு குவிண்டால்ரூ 200 முதல் ரூ 230 க்கு மேல் போகாமல் விலைவைத்து வாங்கி சேமித்து வைக்கிறார்கள். அவர்களது குடோன் களுக்குச் சென்றவுடன் அதே கடலையை ரூ500 முதல் ரூ600 வரை விற்பனை செய்கிறார்கள். விவசாயி சந்தைக்கு கொண்டுவந்து விட்டால் திருப்பி கொண்டு போக முடியாது ஒரு வியாபாரி விலை கேட்டு விட்டால் அதை மற்றவர் வாங்கமாட்டார். அப்படி வாங்கினால் முதல் வியாபாரி கேட்ட விலையை விட ஒரு காசு கூட அதிகம் தரமாட்டார்கள். எனவே, வியாபாரி கேட்ட விலையில் கொடுத்துதான் விற்றாகவேண்டும்.

### இடையிலே மோசடி

இன்று நாடு பூராவும் குவிண்டால்—கிலோ கணக்குகள்தான் நிறுவை அளவாக இருந்தாலும் கடலை வியாபாரிகளை பொருத்த மட்டில் பல இடங்களில் பல மாதிரி நிறுவை அளவையில் மோசடிகள் குவிண்டால் ஒரு இடத்தில் அதிலும் நிறுவை தராசிலும் மோசடி. லிட்டர் மரக்கால், பட்டணம் படி வள்ளம்— பறை என்று பல அளவு முறைகளில் ஏமாற்றப்படுகிறார்கள்.

விவசாயிகளுக்கு கடன் கொடுக்க முன் வராத வங்கிகள் பூராவும் கடலை வியாபாரிகளுக்கு தாராளமாக கடன் உதவிகள் செய்து வருகின்றன.

### ஒழுங்குமுறை விற்பனை கூடம்

வியாபாரிகள் விவசாயிகளை ஏமாற்றாமல் இருக்க என்று ஒழுங்குமுறை விற்பனைக் கூடங்கள் ஏற்படுத்தி இருப்பதாக அரசுகூறுகிறது. அந்தஅமைப்புகள்பூராவும் என்ன செய்கின்றன? கடலையை விவசாயிகள் ஒரு இடத்தில் கொண்டுவந்து சேர்த்தவுடன் வியாபாரிகள் பூராவும்வருவார்கள். அவர்கள் கடலை விலையை பற்றி தனித்தனியே சீட்டு எழுதி ஒரு பெட்டியில் போடுவார்கள் அதில் ஒரு வியாபாரியை விட அடுத்தவர் ''5'' காசு அல்லது 10 காசுகளுக்கு மேல் கேட்டிருக்க மாட்டார்கள். இந்த சீட்டுகளை அதிகாரி பரிசீலனை செய்து அதில் கூடுதல் விலைச் சீட்டை எந்த வியாபாரி போட்டிருக்கிறாரோ அவரிடம் கடலையை விற்குமாறு விவசாயிக்கு அதிகாரி சிபாரிசு செய்வார். இதுதான் ஒழுங்குமுறை விற்பனைக் கூடங்களில் நடக்கும் ஏற்பாடுகள்.

இப்படியாக, பருவ மழையில் பாதிக்கப்பட்டு விதைக் கடலைக்கு அளவுக்கு மீறி விலைகொடுத்து வாங்கி விதைத்து ஆறுமாத காலம் புழுதி மண்ணோடு தனது குடும்பம் பூராவும்போராடி இரவு பகல் பூராவும் காவல் காத்து, புழு, பூச்சிகளின் அபாயத்திலிருந்து காத்து கடலையை எடுக்கின்றனர். அவ்வாறு எடுக்கும் கடலையை விவசாயி விற்கும் போது விலைமோசடி, எடை மோசடி ஒழுங்கு முறை விற்பனை கூட ஏமாற்றுதல் ஆகிய இத்தனைக்கும் ஆளாக்கப்பட்டு வாழ்க்கையில் நிம்மதி இழந்து ஆண்டு தோறும் கடன் அளவுகூடி வாழ்வில் கண்கலங்கி நிற்கும் இந்நிலையில்தான் நிலக்கடலை உற்பத்தி செய்யும் விவசாயிகளின் வாழ்வு தடுமாறிக் கொண்டிருக்கிறது.

இந்நிலை மாற கடலை வியாபாரிகளுக்கு கீழ்கண்ட விதத்தில் நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும் என்று மத்திய—மாநில அரசுகளை இம்மாநாடு கோருகிறது.

1) கடலை பருப்பு ஒரு குவிண்டாக்குரூபாய்லு300 குறைந்த பட்ச விலையாக நிச்சயிக்கப்பட வேண்டும் இந்நிச்சயிக்கப்பட்ட விலைக்கு அரசே பூராவையும் கொள்முதல் செய்ய வேண்டும்.

2) விவசாய இலாகாவின் மூலம் ஒரு கிலோவுக்கு 3-50க்கு மேல் போகாத விலையில் விதைக் கடலைப்பருப்பு விவசாயிகளுக்குகொடுக்கப்படவேண்டும்

3) ஏனைய விவசாயிகளுக்கு கடன் வாங்குவதை போல் கடலை விவசாயத்திற்கும்— கூட்டுறவு நாணய சங்கங்கள் மூலமோஅல்லதுஅரசாங்கம் நேரடியாகவோ தேவையான கடன்களைவழங்கவேண்டும்.

கடலைச் செடிகளானது, பூச்சிகளால் தாக்கப்பட்டு அழிக்கப்படும் அபாயமும் உள்ளது. அப்போது கடலை பயிர்பாதுகாப்புக்கான மருந்தடிக்கும் பொறுப்பு பூராவையும் அரசு ஏற்று பயிர்பாதுகாப்பு நடவடிக்கை எடுக்கப்படவேண்டும.

இந்த குறைந்த பட்ச கோரிக்கைகளைஏற்று' கடலை விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும் பல்லாயிரக் கணக்கான குடும்பங்களின் வாழ்வை பாதுகாக்க அரசு முன் வர வேண்டும் என்று இம்மாநாடு அரசைகேட்டுக்கொள்கிறது. இக்கோரிக்கைகளை பெற கடன் விவசாயிகள் ஒன்றுபடுமாறு அவர்களை இம்மாநாடு அறைகூவி அழைக்கிறது.